# என் அருமை ஈழமே!

ஈரோடு தமிழன்பன்



## ஐ நூல் விவரக் குறிப்பு ஞ

நூல்:
**என் அருமை ஈழமே!**

நூலாசிரியர்:
**கவிஞர் ஈரோடு தமிழன்பன்**

பக்கங்கள்:
**120 பக்கங்கள்**

முதற்பதிப்பு:
**மே 2009**

வடிவமைப்பும்
மெய்ப்புத் திருத்தமும்:
**தி.நடராசன்**
**பாரதி அச்சகம்**

அட்டை வடிவம்:
**மா.விஜயன்**

அச்சாக்கம்:
**பிரிண்டெக் இந்தியா**
சென்னை - 5

வெளியீடு:
**அன்னை முத்தமிழ்ப் பதிப்பகம்**

**விலை:ரூ.80**

ஈழத் தமிழர்களின்
விடுதலைப் போராட்டம்
குறித்துத் தமிழகத்துப்
படைப்பாளியின் முதல் நூல்



மார்க்சியச் சிந்தனையாளர்,
ஆய்வாளர்

## கோவை ஞானியின் அணிந்துரை

# இன்னும் என்னவெல்லாம் நேருமோ?

## - ஈழத்திற்கும் நமக்கும்

"என் அருமை ஈழமே!" என்ற கவிஞர் தமிழன்பனின் தொகுப்பிலுள்ள 15 கவிதைகளையும் பலமுறை வாசித்தேன். தமிழன்பனின் கவித்துவ மேன்மைக்கு இந்தத் தொகுப்பு மேலும் ஒரு சான்று. ஈழத் தமிழகத்தின் வரலாற்று நிகழ்ச்சிகள் சில இக்கவிதைகளில் இடம் பெறுகின்றன. கவிதையில் வரலாறு சொல்லப்படலாம்; வரலாற்றைச் சொல்வதற்காகக் கவிதை எழுத முடியாது. வரலாற்றின் சில சோகங்களை, வீர நிகழ்ச்சிகளை, குறிப்பாக வரலாற்றின் சாரத்தை உருக்கமாக - ஆழ்ந்த அர்த்தச் செறிவுடன் சொல்வதற்குக் கவிதை தேவை.

தமிழன்பன் கவிதைகள் இத்தகைய அர்த்தச் செறிவுடன் இயங்குகின்றன. வரலாற்று நிகழ்ச்சி களைக்கூட முதன்மையாகச் சொல்லும் கவிதைகள் சிலவற்றில் கவித்துவத்தின் ஊடாட்டத்தை நாம் காண முடியும்.

அண்மையில் நடைபெற்று முடிந்ததாகச் சொல்லப் படும் நான்காவது ஈழப்போர், சிங்கள அரசு சொல்வது போல் முடிந்துவிட்டது என்றாலும், இன்னொரு போருக்கான எத்தனையோ ஆதாரங்களை - தேவைகளை நான்காவது ஈழப்போர் விட்டுச் சென்றுள்ளது. தமிழன்பன் திரும்பத் திரும்ப ஒரு உண்மையைச் சொல்லுகிறார். தமிழுக்கு - தமிழனுக்குச் சாவு இல்லை என்கிறார். வரலாற்றின் விடுதலைக்கான மனிதனின் போர்

எந்தக் கட்டத்திலும் முடிவு பெறுவதில்லை. ஈழத்தமிழகம் இன்னொரு காலத்திலேனும் உருவாகும். தமிழன்பனோடு சேர்ந்து நாமும் இது சத்தியம் என்று உரத்துச் சொல்லலாம்.

ஈழத்தமிழகத்தின் வரலாற்றில் இடம்பெற்ற சில நிகழ்ச்சிகளைச் தமிழன்பன் இத்தொகுப்பில் அங்கங்கே சொல்லுகிறார். கடலுள் என்றோ ஆழிப்பேரலையால் மூழ்கிய குமரிக்கண்டத்தின் எச்சம்தான் இலங்கைத் தீவு. சிங்களன் இந்தத் தீவில் வந்து குடியேறுவதற்கு முன்பு, இந்தத் தீவில் வாழ்ந்தவன் தமிழன்; இதற்கான வரலாற்றுச் சான்றுகள் குறித்து ஒரு கவிதையில் சொல்லுகிறார். இலங்கைத் தீவில் வாழ்ந்த தமிழனின் தொன்மையை மறைத்து, சிங்களனின் தொன்மையை உறுதிப் படுத்துவதற்காக எத்தனையோ பொய்கள் உண்டு. இப்படி எழுதப்பட்ட மகாவம்சம் பற்றியும் இத்தகைய பொய்ம்மைகளை உருவாக்கிய மாகதேரர் பற்றியும் தமிழன்பன் குறிப்பிடுகிறார். தமிழறம் பேணிய எல்லாளனைச் சதியால் மாய்த்தவன் துட்டக்காமினி என்பதைச் சொல்வதோடு, வரலாற்றில் எல்லாளனுக்கும் சாவு இல்லை; துட்டக்காமினிக்கும்தான் சாவு இல்லை என்கிறார் கவிஞர். துட்டக்காமினியின் அண்மைக்கால அவதாரம்தான் இராஜபக்சே என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும்.

ஈழத்தமிழனின் பேரறிவுக்குச் சான்றாக விளங்கிய தென்கிழக்கு ஆசியாவிலேயே மிகப்பெரிய யாழ்ப்பாண நூலகத்தைக் காமினி திசநாய்க்க தலைமையில் சிங்களர்கள் எரித்த செய்தியை ஒரு கவிதையில் உருக்க மாக, ஆவேசத்தோடு கவிஞர் சொல்லுகிறார். ஆறுமுக நாவலர் கதறினார், தாமோதரனார் தடுக்க முயன்றார் என்றெல்லாம் சொல்லுகிறார்; இத்தகைய பேரழிவைச் செய்த காமினி திசநாய்க்க வெடித்துச் செத்தது அவனுக்கான தண்டனை என்று கவிஞர் எழுதுகிறார். கவிதைக்குரல் இப்படித்தான் அறம் சொல்லும் என்பதை நாம் ஏற்கிறோம்.

வெலிக்கடைச் சிறையைத் தகர்த்த வீர மறவர்கள் பற்றிப் பேசும் இன்னொரு கவிதையில், காலந்தோறும் பாசிடில் சிறைகள் தகர்க்கப்படுவதைச் சொல்லுகிறார்.

வரலாற்றைக் கொடுங்கோலர்கள் தம் கைப்பிடிக்குள் முடக்கி வைக்க முடியாது என்ற வரலாற்று உண்மையைக் கவிஞர் இப்படி மொழிபெயர்த்திருக்கிறார்.

குட்டிமணியின் கண்கள் பிடுங்கப்பட்டு மிதிபட்ட செய்தியைச் சொல்லும்போது, அந்தச் சிறைச்சாலை எல்லைக்குள் இருந்த புத்தரும் கதறினார் என்கிறார். சிங்களவன் கையில் வெறியராகப் புத்தர் மாற்றப்பட்டார் எனினும், அவருக்குள்ளும் அடங்கியேனும் இருக்கின்ற கருணை தன் தாழை உடைத்துக்கொள்ளத்தான் செய்யும். கவிதைக்குள் எப்பொழுதும் இத்தகைய கருணை சுரக்காமல் இருக்க முடியாது.

தனிச்சிங்களச் சட்டம் பிறப்பிக்கப்பட்டுச் செயல்படத் தொடங்கிய நாளை, கருப்பு நாள் என்று சொன்னதோடு அன்று வீடுதோறும் கருப்புக்கொடி ஏற்றுங்கள் என்றார் தந்தை செல்வா. திருகோணமலைக் கம்பத்தில் கருப்புக் கொடியேற்றிய தமிழ் வீரனை ஒரு சிங்களக் காடையன் சுட்டுக்கொன்ற செய்தியை இன்னொரு கவிதையில் சொல்லுகிறார்.

இத்தொகுப்பிலுள்ள இறுதிக் கவிதையில் மட்டக் களப்புக்கு அருகில் உள்ள கிராமம் ஒன்றில் 14 வயதுக் கன்னிப்பெண் புனிதவதி, அவள் தாயின் கண்முன்னே சிங்களக் காடையர் ஐவரால் கற்பழிக்கப்பட்டுப் பிறகு அவள் தாயையும் அந்தக் காடையர் கொன்ற செய்தியைச் சொல்லுகிறார். ஈழப்போரின் இறுதிக் கட்டத்தில் இந்தியாவிலிருந்து சென்ற நாராயணனும், மேனனும் கற்பழிக்கப்பட்டு மனநிலை பிறழ்ந்து மருத்துவமனையில் பிதற்றிக் கொண்டிருக்கும் அந்தப் பெண்ணைப் பார்க்கட்டும்; பார்த்த பிறகு சிங்கள அரசின் இறையாண்மை பற்றி இவர்கள் பேசட்டும் என்கிறார். இப்படிக் கற்பழிக்கப்பட்டவர்கள், கொல்லப்பட்டவர்கள், அநாதைகளாக ஆக்கப்பட்டவர்கள் முடமாக்கப் பட்டவர்கள் எத்தனை ஆயிரங்கள் சேரும்? இவர்கள் எல்லாம் சிங்கள இறையாண்மைக்கு இந்திய அரசு தந்த காணிக்கைகள். இடையில் ஒரு கவிதையில் தமிழீழ விடுதலை இயக்கத்துக்கும் சிங்கள அரசுக்கும் இடையில் நடைபெற்ற ஒப்பந்தங்களைத் தேமல் ஒப்பந்தங்கள் என்று சரியாகவே கவிஞர் குறிப்பிடுகிறார். சனநாயக முறையில் சில பத்தாண்டுகள் சிங்கள அரசோடு போராடிப் பார்த்த

பிறகுதான், இத்தகைய போராட்டக் காலத்திலும் சிங்கள இராணுவ வெறியர்களால் நுற்றுக்கணக்கான தமிழர்கள் கொல்லப்பட்டும், பெண்கள் கற்பழிக்கப்பட்டும் நாசமான நிலையில்தான் ஈழத்தமிழர் ஆயுதம் ஏந்தினர். அறநெறியைக் காப்பதற்குத்தான் ஆயுதமேந்தினர்; அறத்தைக் காப்பதற்கு வேறுவழியில்லை என்ற நிலையில்தான் ஆயுதமேந்தினர். உண்மைதான்; ஆயுதங்களுக்கு அன்பு தெரியாது என்கிறார் கவிஞர். இந்தக் கூற்றின் ஆழத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியும். ஈழத்தமிழன் தன் தேசத்தை - தொன்மையை - வரலாற்றை இழந்துவிட முடியாது. போரிடத்தான் வேண்டும்; சாவில்லாமல் வாழ்வில்லை.

காலந்தோறும் தேசந்தோறும் கொடுங்கோன்மையை எதிர்த்து விடுதலைக்கான போர்கள் தவிர்க்க இயலவில்லை. ஈழத் தமிழகத்திற்கான விடுதலைப் போரும் தவிர்க்க முடியாத போர். ஈழ விடுதலைப் போரைக் கவிஞர் நினைத்துப் பார்க்கிறார். பாலஸ்தீன விடுதலைப்போர் முதலியவற்றின் தொடர்ச்சிதான் இந்தப் போரும். மனித விடுதலைக்காகப் போரிட்ட சேகுவேரா, ஹோசிமின், மாவோ முதலியவர்கள் கவிஞர் நினைவுக்குள் வரிசையாக வருகின்றனர்; நெருடா நினைவுக்கு வருகிறார்; பிகாசோ நினைவுக்கு வருகிறார்; இந்திய வரலாற்றில் பலர் நினைவுக்கு வருகின்றனர்; ஈழத் தமிழகத்தில் சுபாஷ் பிறந்திருக்கிறார்; பகத்சிங் பிறந்திருக்கிறார் என்கிறார். வ.உ.சி.யும், பெரியாரும் காமராசரும் இன்று ஈழத்தில்தான் இருக்கின்றனர் என்கிறார்; கவிஞர் நினைவுக்குள் படிந்திருக்கின்ற தடம் நமக்குள்ளும் புலப்படுகின்றது. இத்தகைய மகாவீரர்கள்தான் வரலாற்றை உருவாக்குகிறார்கள் என்பது மட்டுமல்ல; மனித ஆளுமையின் மேன்மைக்கும் வளத்திற்கும் இவர்கள் சான்றுகள். வரலாற்றுக்குள்ளிருக்கும் சாரத்தை, செறிவான அர்த்தத்தை கவிதை இயக்கம் இப்படித்தான் தனக்குள் கொண்டிருக்கிறது. காலங்கள் இப்படித்தான் வரலாற்றுக்குள் இணைகின்றன. காலத்தை மனிதன் கடந்து செல்வதும் இப்படித்தான். இத்தகைய பாரிய பரிமாணத்தைக் கொண்டதன் மூலம்தான் கவிதை நம் நெஞ்சுக்கு நெருக்கமாகிறது.

ஈழத் தமிழனாகட்டும், இந்தியத் தமிழனாகட்டும் தமிழ் வரலாற்றின் தொன்மையை, - மேன்மையை மறந்துவிட முடியாது. சங்க இலக்கியத்தையும் சிலப்பதிகாரம் முதலிய பேரிலக்கியங்களையும், தேவாரம் முதலிய பக்தி இலக்கியத்தையும் தமிழிசை, சிற்பம், நாட்டியம் முதலிய தமிழ்க் கலைகள் - இவற்றையெல்லாம் தமிழனால் எப்படி மறக்கமுடியும்! ஈழத்தமிழகம் உட்பட இந்திய வரலாற்றின் அடித்தளங்களில் இருப்பது, இயங்குவது, தமிழ் நாகரிகம், சமத்துவம், சமதர்மம் என்பனவற்றை உள்ளடக்கிய தமிழறம்தான் தமிழன் நெஞ்சில் ஆழப் பதிந்து அவனை இன்றளவும் தமிழனாக, மனிதனாக வைத்திருக்கிறது. எல்லாளனைப் போலவே ஈழத்தமிழ் மறவர்களும் அறத்திற்காகத்தான், அறத்தோடுதான் போராடினர். வரலாற்றின் இந்தத் தொன்மையை, மேன்மையை, தமிழறத்தை இழந்தவன் தமிழனாகவும் இருக்க முடியாது. தமிழறத்திற்குச் சாவில்லை; ஈழத்தமிழனுக்கும் சாவில்லை. தமிழன்பன் உருக்கமாக ஒரு கவிதையில் சொல்லுகிறார் - ஈழத்தமிழரின் விடுதலைக்காகப் போராடி மண்ணுக்குள் புதையுண்டவர்கள்; நாளை மீண்டும் பிறந்து வருவார்கள்; அவர்களுக்காக நாங்கள் தொட்டில் கட்டி வைத்திருக்கிறோம் என்கிறார்.

சிங்கள இராணுவத்தின் வருகையை எதிர்பார்த்துக் கிளிநொச்சியைவிட்டுச் செல்லும் ஈழத் தமிழ்த்தாய், தன் குழந்தையோடும் சுருதிப் பெட்டியோடும் செல்கிறாள். தேவாரப்பாடலை அவளால் இழக்க முடியாது. விடுதலைக் காகப் போராடி வீரச்சாவடைந்து மண்ணில் புதையுண்ட மாவீரர்கள், இன்னொரு காலத்தில் தங்கப்பாளங்களாய் மாறுவார்கள்; ஈழத்தமிழ்க் குழந்தைகளின் அணிகலன் களாய் அவர்கள் குழந்தைகளை அலங்கரிப்பார்கள் என்கிறார்.

**விடுதலைப் போராளிகளே!**
**உமது புகழைவிட ஒளிமிக்கதன்று**
**சூரியன்;**
**உமது தாயகப் பற்றைவிட ஆழமானதன்று**
**இந்துமாக்கடல்!**

என்கிறார் கவிஞர்.

இன்னும் என்னவெல்லாம் நேருமோ என்று இறுதிப் போரின் ஒரு கட்டத்தில் நொந்து பேசுகிறார் கவிஞர். இன்னும் எவ்வளவோ நேரும் என்பது குறித்து ஒவ்வொரு நாளும் நாம் எத்தனையோ செய்திகள் கேட்டு நமக்குள் கலங்கிப் பேசுகிறோம். இந்திய அரசை நொந்து கொள்கி றோம்; கலைஞரையும் நொந்து கொள்கிறோம்; உலக நாடுகள் ஏன் உதவிக்கு வரவில்லை என்று கேட்கிறோம். இரஷ்யா, சீனா, வியட்நாம், கியூபா முதலிய நாடுகள் எப்படித் தடம் புரண்டன என்றும் கேட்கிறோம். உண்மைதான்; அமெரிக்காவும் பிரிட்டனும் உலகளவில் செய்த மனித உரிமை மீறல் அளவுக்குச் சிங்கள இராணுவம் செய்ததா? செய்ய முடியுமா? கூடுதலாகச் செய்தததா? என்றெல்லாம் கணக்கிட்டுக் கொள்கிறோம். காஷ்மீர் முதலிய பகுதிகளில் இந்திய இராணுவம் செய்யா ததையா நாங்கள் செய்துவிட்டோமென்று ஒரு சிங்கள அமைச்சர் கேட்கிறார். பாதுகாப்பு வளையத்திற்குள் அடைபட்டுக் கிடக்கிற மூன்று இலட்சம் தமிழர்களுக்கு எந்தக் காலத்தில் தமக்கான நிலம், வாழ்வு கிடைக்கும் என்று கேட்டுக்கொள்கிறோம். பாதுகாப்பு முகாம் களிலிருந்து பிரித்தெடுக்கப்படும் 10,000க்கு மேற்பட்ட இளைஞர்கள் எந்தச் சித்திரவதை முகாம்களில் எப்படி யெல்லாம் அழிவார்கள் என்று ஏங்குகிறோம். இன்னொரு ஈழப்போர் எத்தனை காலம் கழித்து உருவாகும்? இத்தகைய மாபெரும் கொலை பாதகத்தைச் செய்த பத்தாயிரக்கணக்கான சிங்கள வெறியர்கள், காடையர்கள் என்றைக்காவது மனிதராக மாறுவார்களா? மாற முடியுமா? என்று கேட்டுக் கொள்கிறோம். எத்தனையோ தேசங்களிலிருந்து ஏராளமான கடன்பெற்றுத் தன் தேசத்தின் பொருளாதாரத்தையும் அடித்தள மக்களின் வாழ்வையும் சிங்கள அரசால் அடமானம் வைக்கப்பட்ட சிங்கள மக்களுக்குத்தான் என்றைக்கு விடுதலை சாத்தியம்?

இறுதியாக, நமக்குள்ளும் கேட்டுக்கொள்கிறோம். கவிஞர் சொல்வது போல் தொலைக்காட்சித் தொடர்களைப் பார்த்துக் கொண்டும், உண்டும் உறங்கியும் இத்தகைய வாழ்வை, யாருக்கு அடிமைகளாய், யாரின் நலத்திற்காய் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்? தமிழறம் நமக்குள் உயிர்த்தெழுமா?

**- ஞானி**

## பதிவுகள்
## பற்றிய பதிவு

ஈழப்போர் முடிவுக்கு வந்துவிட்டது என்று ஈழத்தமிழர்கள் சொல்லவில்லை; ஈழப் போராளிகள் சொல்லவில்லை; உலகெங்கும் உள்ள தமிழர்களும் விடுதலை விரும்பிகளும் சொல்லவில்லை; இலங்கை அரசு, அதை ஆதரிக்கும் அரசுகள் சொல்கின்றன. எந்த விடுதலைப்போரும். விடுதலை அடையும் முன் முடிவுக்கு வருவதில்லை என்பது உலக வரலாறு தெரிவிக்கும் உண்மை.

கடந்த தமிழர் திருநாளாம் தை முதல் நாளுக்கு, இரண்டொரு வாரங்களுக்கு முன் நான் எழுதத் தொடங்கி, விரைவாக நிறைவு செய்த பதினேழு கவிதைகளின் தொகுப்பு இது. தைத்திருநாளுக்கு என்னிடம் கவிதை கேட்ட இதழ்களுக்கெல்லாம் ஈழத்தமிழர் நிலை குறித்த கவிதைகளையே நான் எழுதிக் கொடுத்தேன். இக்கவிதைகளை எழுதும்போதெல்லாம், பாப்லோ நெருதாவின் 'பொதுப்பாடல்' (Canto General) என்னும் வரலாற்று, அரசியல் தளங்களில் இயங்கும் நூலின் கவிதைகள். ஈழப் பரப்பெங்கும் தெறித்து எனக் குள்ளும் வந்து விழுந்தன. வரலாற்றை - அரசியலைக் கவிதையாக்க முனையும்போது - கவித்துவம் பலியிடப் படாமல் காப்பதற்கான உத்திகளும், கூறுகளும் எப்படித் தேவைப்படுகின்றன என்பதை நெருதாவைக் கற்றே நான் தெரிந்து கொண்டேன்.

இத்தொகுப்பில் உள்ள கவிதைகளுக்காக, நான் இலங்கையின் - ஈழத்தின், நிலவியல், வரலாறு ஆகியன வற்றையும் கற்றேன். தம்மிடம் உள்ள நூல்கள் சில வற்றைத் தந்து உதவிய காந்தளகம் சச்சிதானந்தன், செ.கணேசலிங்கம், அன்னை முத்தமிழ்ப் பதிப்பகத்து வேணுகோபால் ஆகியோர் என் நன்றிக்கு உரியவர்கள்.

1982/1983களில் 'வசந்தத்தில் ஒரு வானவில்' என்னும் திரைப்படத்திற்குக் கதை வசனம் எழுதி - அதற்குத் துணை இயக்குநராகப் பணியாற்றியபோது - இலங்கையில் ஏறத்தாழ இரண்டு திங்கள் தங்க' நேர்ந்தது. அப்போது திருகோணமலையிலும் அதைச் சுற்றியுள்ள சில பகுதிகளிலும் தமிழர்களைச் சந்திக்க நேர்ந்தது. பேராசிரியர் க. கைலாசபதி நான் அங்கு இருப்பது தெரிந்து கொண்டு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் உரையாற்ற வரவேண்டும் என்று அழைத்தார். என் சூழல் இடம் தரவில்லை. மலையகத் தமிழர்கள் வாழிடங்களைப் பார்க்கவும், அவர்களோடு உரையாடவும் நுவாரலியாவில் தங்கியிருந்தபோது வாய்ப்புகள் கிடைத்தன. அத்திரைப்படத்திற்கு ஒளிப்பதிவாளர் சுமித் அமரசின்கே, இசையமைப்பாளர் கேமதாச, பொதுவான உதவியாளர் அப்புக்கோடன் - எல்லாம் சிங்களர்களே. எனினும் எளிமை, அன்பு, மானுட நேயம் கனிந்த மனிதர்கள். இயக்குநர் ஆழ்ந்த கலை அறிவும், நுணுக்கமான திறனும் படைத்த அர்ச்சுனா - தமிழர். இங்கு இதனைச் சுட்டக் காரணம் ஈழ மண்ணில், எனக்கு ஓர் அனுபவமும் இருந்திருக்கிறது என்பதைக் கோடிட்டுக் காட்டத்தான்.

இத்தொகுப்பில் உள்ள பதினைந்து கவிதைகளைத் தமிழகத்தின் தலைசிறந்த ஆய்வாளர், மார்க்சியச் சிந்தனை யாளர் ஞானி அவர்கள் பார்வைக்கு அனுப்பி - ஒரு முன்னுரை வேண்டினேன். அவருக்கு அவை அனுப்பப் பட்ட பிறகு இரண்டு கவிதைகளை நான் எழுதினேன். மானுட நேயமிக்க ஞானி அவர்கள் ஒரு தகுதியான முன்னுரையை இந்நூலுக்கு வழங்கியுள்ளார். ஈழத் தமிழர்கள்மீதும் அவர்களின் விடுதலைமீதும் எவரினும் குறையாத அக்கறை உடைய அவருடைய சொல் ஒவ்வொன்றாலும், காவியமாகக் கோத்துப் பார்க்கத்தக்க கவிதைகளைக் கொண்ட இத்தொகுப்பு, கனதி பெறுகிறது என்று நான் சொல்வேன். ஞானி அவர்களுக்கு என் நன்றி, எப்போதும் போல.

சாகித்திய அகாதெமி 'எழுத்தாளர் சந்திப்பு' என்னும் நிகழ்ச்சிக்கு என்னை அழைத்துப் பெருமைப்படுத்தியது (4-5-2009). அந் நிகழ்ச்சியில் என்னைப்பற்றிய ஒரு வரைவை அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்டது. அதன் இன்றியமையாப் பகுதியை இத்தொகுப்பு சேர்த்துக் கொண்டிருக்கிறது. சாகித்திய அகாதெமிக்கு என் நன்றி.

அன்னை முத்தமிழ்ப் பதிப்பகம் வெளியிடும் இந்நூலுக்கு மிகுந்த கவனத்தோடும் ஆசையோடும் கவனித்து வடிவம் கொடுத்து உதவிய பாரதி அச்சகம் தி.நடராசன் என் சிறப்பான பாராட்டுக்கும் நன்றிக்கும் உரியவர். இத்தொகுப்புக் கவிதைகள் சிலவற்றைத் தமது அழகிய கையெழுத்தால் படியெடுத்துக் கொடுத்த பேராசிரியர் கோ.தாமோதரனுக்கு என் ஆக்க விழைவுகளும் ஆசை வாழ்த்துகளும் உரியன. முகப்பைப் படைத்த கணினிக் கலைஞர் மா.விஜயன், அவர்களோடு விடிவெள்ளி ஜெ.கிருட்டினமூர்த்தி, தையல் கலைஞர் த.காசிநாதன் ஆகியோரும் என் வாழ்த்துகளை வாரிக்கொள்ளலாம்.

**-தமிழன்பன்**

## பதிப்புரையாக....

என்னருமை ஈழமே' என்னும் ஈரோடு தமிழன்பனின் இந்நூல், ஒரு கவிதை நூலாகமட்டும் கவனத்தில் கொள்ளாதபடி, காவியத்தன்மை சிதைவுறா வண்ணம் வரலாற்று அரசியல் பரிமாணங்களும் பொதியப் பெற்றிருப்பதால், இந்நூலைப் பதிப்பிக்கும்போது ஈழத் தமிழர் . வரலாற்றையும் தொட்டுத் தொடங்க வேண்டியுள்ளது.

இலங்கை இனப்பிரச்சினையை அதன் அறுபது ஆண்டுக்கால வரலாற்றுப் பின்னணியிலேயே அணுக வேண்டும். 1956இல் கொண்டுவரப்பட்ட ஒற்றை ஆட்சிமொழிச் சட்டம், அதாவது சிங்களம் மட்டுமே இலங்கையின் ஆட்சிமொழி என்னும் சட்டம் தமிழரின் மொழியுரிமையைப் பறித்தது. தமிழர் அரசுப் பணி வாய்ப்புகளை இழந்தனர். பின்னர் சிங்களம் மட்டுமே நீதிமன்ற மொழியாகியது. 'தரப்படுத்துதல்' என்னும் முறையைப் புகுத்திப் பல்கலைக்கழகங்களில் மாணவர் சேர்க்கைக்குத் தமிழர்கள் சிங்களர்களைக் காட்டிலும் அதிக மதிப்பெண்கள் பெறவேண்டுமென்னும் முறை அமலாகியது. தமிழர்களின் கல்வியுரிமை பறிக்கப்பட்டது.

இப்படி அடிப்படை உரிமைகள் படிப்படியாகப் பறிக்கப்பட்ட நிலையில் அறவழிப் போராட்டத்தில் தமிழர்கள் உரிமை மீட்புப் போரைத் தொடங்கினர்.

ஈழத்தமிழரின் போராட்டம் மிகமிக நியாயமான, தவிர்க்கவியலாத விடுதலைப் போராட்டம். ஈழ நிலத்தின்

சொந்தக்காரர்களான, பூர்வ குடிகளான, தமிழர்களின் வாழ்வுரிமைப் போராட்டம் என்பதைக் கவிஞர் ஈரோடு தமிழன்பன் கூறுகிறார்.

**அதிகாரக் கடிவாளத்தை**
**இலங்கையிடமிருந்து கைப்பற்ற**
**நினைத்தல்ல;**
**சிங்களரை**
**அந்த மண்ணிலிருந்து அகற்றிவிட**
**ஆத்திரமுற்றல்ல;**
**தங்கள்**
**இதயத்தில், இரத்தத்தில் இருக்கும்**
**தமிழ் மொழியை**
**இழக்காமலிருக்க.**

வன்முறை வழியை அவர்கள் தாமாக விரும்பித் தேர்ந்தெடுக்கவில்லை. அஃது அவர்கள் மீது திணிக்கப்பட்டது. அதற்காக அவர்கள் அதிக விலை கொடுக்கவும் நேர்ந்தது. ஆனால் பேரினவாதச் சிங்கள அரசின் வன்முறை வெறியாட்டங்களுக்குத் தக்க பதிலடி கொடுக்க முடிந்தபோதுதான் தமிழினம் தலைநிமிர்ந்து நிற்கவும் முடிந்தது. அறவழியல்ல என்றபோதிலும் ஈழத் தமிழரின் ஆயுதப் போராட்டத்தின் அசைக்க முடியாத நியாயத்தைக் கவிஞரும் ஒப்புக்கொள்கிறார் - அவரின் பின் வரும் வரிகளில்...

**அவர்கள்**
**ஆயுதங்கள் ஏந்தியது அறவழியாகாது;**
**தெரியும் எனக்கு!**
**அவர்களை ஆயுதங்கள் ஏந்தவைத்தவர்கள்**
**அவர்களை அப்படி ஆக்கியதை**
**என்னோடு சேர்ந்து**
**ஆயுதங்களும், இரத்தச் சிந்தல்களும்**
**மரணங்களும், காயங்களும், துயரங்களும்**
**வன்மையாகக் கண்டிக்கின்றன.**

மாவீரர்களின் கல்லறைகளைக்கூட இருந்த இடம் தெரியாமல் ஆக்கிவிட்டது சிங்களப் பேரினவாதம். மனித

வாழ்வின் மகத்தான சோகம், தாம் பிறந்து வாழ்ந்த மண்ணை விட்டுத் துரத்தப்பட்டு உரிமையையும் உடைமைகளையும் ஒருங்கே இழந்து அடையாளங் களில்லாத அனாதைகளாகிப் போவதுதான். அந்த ஆற்றொணாத் துயரத்தைக் கோடிட்டுக் காட்டுகின்றன கவிஞரின் இந்தச் சோக வரிகள்:

**தனிமையில் விட்டுச்**
**சென்றுவிட்டீர்களே என்று வீடு**
**அழுதது;**
**வீட்டு வாசலில்**
**வாடிப்போயிருந்த முல்லைக் கொடி**
**அழுதது;**
**உள்ளே இருந்து**
**அடுப்படி கடந்து நடுங்கியும் ஒடுங்கியும்**
**வெளியே வந்த பூனை**
**அழுதது.**

இலங்கையின் சிங்களப் பேரினவாத அரசு தமிழர் களை ஒருபோதும் தனது குடிமக்களாகக் கருதியதில்லை. ஒரு நாடு அந்நிய நாடு ஒன்றின் மீது படையெடுத்தாலும் அந்நாட்டிலுள்ள குடிமக்கள் மீது, குடியிருப்புகளின்மீது தாக்குதல் நடத்தக் கூடாது என்பது போர் மரபாகும். ஆனால் இலங்கை அரசு கடந்த இருபத்தைந் தாண்டுகளுக்கும் மேலாகத் தமிழர் பகுதிகளின் மீது இடையறாது குண்டு மழை பொழிந்து வந்துள்ளது. இதனால் அங்குப் பதுங்கு குழிகள் இல்லாத வீடுகள் கிடையாது. வானூர்தி அரவம் எப்போது கேட்டாலும் உடனடியாக மக்கள் அனைவரும் அவரவர் வீடுகளிலுள்ள பதுங்கு குழிகளுக்குள் மறைந்துதான் உயிர் பிழைக்க வேண்டும். மழலையர் கல்வி பயிலும் பள்ளிக் கூடங்களுக்கும் இதுதான் கதி.

இந்த அவலத்தைச் சொல்ல வரும் கவிஞரின் இரண்டே வரிகள் நம் இதயங்களைக் கனக்கச் செய்கின்றன:

பள்ளிகள்

பதுங்கு குழிகளுக்குள்.

ஈழத்தமிழர் விடுதலை இயக்கங்கள் பன்னாட்டு இராணுவப் பலத்தால் முற்றாக ஒடுக்கப்பட்டுவிட்ட இன்றைய நிலையில் ஈழத்தமிழரின் எதிர்காலம் கேள்விக் குறியே.

கவிஞரின் பின்வரும் சொற்கீற்றுகள் நமது நம்பிக்கை ஊற்றுகள்:

மரணத்தின்

கருவறையிலிருந்து

மாவீரர்கள்

தொடர்ந்து பிறப்பார்கள்.

இன்று தமிழகத்தில் நம்மிடையே வாழும் கவிஞர் களில் 'ஈழத் தமிழர்' உரிமைப் போராட்ட வரலாற்றை முதன் முதலாகப் பதிவு செய்யும் வகையில், கவிஞர் ஈரோடு தமிழன்பன் இந்நூலைப் படைத்தளித்துள்ளார் என்பதை எமது பதிப்பகம் சுட்டிக்காட்ட விரும்புகிறது.

இந்நூலை எங்கள் பதிப்பகம் வெளியிடுவதற்கு மனமுவந்து உதவிய கவிஞர் அவர்களுக்கு நன்றி கூறுவதுடன்; இன்றைய ஈழத்தில் வீழ்ந்துபட்ட தமிழினத்திற்கும் - காயங்களோடும், கனலும் இதயத் தோடும் வாழ்ந்துகொண்டிருக்கும் தமிழீழ மக்களுக்கும் ஆற்றாது அழுத கண்ணீரோடு இந்நூலைப் படைக்கிறோம்.

**- அன்னை முத்தமிழ்ப் பதிப்பகம்**

# பொருளடக்கம்....

# இலங்கை - மொழிக்குழுத் தொகுப்பு




அளவு 1:2,650,000



# இன்னும் என்ன நடக்குமோ?

களனி கங்கைக்குத் தெரியும்
கும்புக்கன் ஆற்றின் ஒவ்வோர் அலைக்கும் தெரியும்
கனகராயன் நதியோரப்
பச்சைப் பிறப்புகளுக்குத் தெரியும்
தொல்வரலாற்று
வாக்கியங்களாகக் காலவெளி கடக்கும்
சூரியன் ஆற்றுக்கும் மேலாற்றுக்கும்
தெரியும்.
இலங்கை,
பழந்திராவிடர் தீவு;

இலங்கை
தனது முதல் பகலில் கண்ட முகம்
தமிழ் முகம்
இலங்கை
தனது முதல் இரவில் கேட்ட பாடல்
தமிழ்ப்பாடல்.

திருகோணமலை
எப்போது இலங்கையின் கனவில் இருந்ததோ
அப்போதிருந்தது
திருகோணமலை நனவில்
தமிழ வாழ்வு.
வவுனியாவில் இருக்கும்
நூறு நூறு குளங்களிலும்
தண்ணீரைவிடத் ததும்பி நிறைந்திருந்தது
தமிழர் வரலாறு.

ஏழாயிரம் ஆண்டுகளுக்குமுன்
தென் தமிழகத்து
இடுப்பில் இருந்த குழந்தை இலங்கை.

அனுராத புரத்தின்
தூக்கத்திற்கும் இது தெரியும்
பொலன்னறுவையின் மறதிக்கும்
இது தெரியும்.

மலையகத்துத்
தேயிலைத் தோட்டத்தில் காற்றை
நிறுத்திக் கேளுங்கள் அது
தமிழில் பதில் சொல்லும் உங்கள் கேள்விக்கு.

பால் சுரக்கும் மரங்களின்
வேர்களும் மண்ணும் இன்றும் கூடத்
தமிழில்தான்
விடுகதைகள் போட்டுக் கொண்டிருக்கின்றன.

அம்பாறை மாவட்டத்துப்
பழம்பிராமிக் கல்வெட்டிலிருந்து
ஈராயிரம் ஆண்டு வயது முதிர்ந்த தமிழச்சி
புறப்பட்டு வருகிறாள்
கை வளையல்கள் கால் கொலுசுகள்
தென் பாங்குத் தமிழிசைக்க...

'என் மார்புகளில்
நான் பாலூட்டி வளர்த்தது தமிழைத்தான்!
என்னைத்
தன் மார்பில் பாலூட்டி வளர்த்தவள்
தமிழச்சிதான்'
என்று அவள் சொல்வது
எவர் செவிகளிலும் விழாதபடி

அட்ட கதையிலும் தீபவம்சத்திலும்
பொய்களும் புனைவுகளும்
ஆரவாரித்துப் பொங்குகின்றன.

திகைத்து நிற்கும் அவள்....
சிங்களப் பேரினவாத அரசின் படையால்
அரசின் கூலிப்படையால்
செஞ்சகதிகளில் ஈழம் சிக்கித் தவிப்பதைப்
பார்த்துப் பதைத்துக் கல்வெட்டுப்
பாறைக்குள்
திரும்பி ஓடிக்
கதவைச் சாத்தியதும்
வெடித்துச் சிதறிச் சில்லுச் சில்லாய்
வலுவற்ற வரலாற்றின்
கைகளில் விழுந்தாள்.
பவுத்தச் சிங்களருக்கே
பாத்தியதை இலங்கை என்று புளுகுப்
புராணப் பத்திரம் –
மன்னன் தாதுசேனன் தலையசைப்பில்
தயாரித்தார்
மகாநாம மகாதேரர்

பவுத்தம் பாதம் பதிக்கும் முன்
திராவிடம் இருந்த பூமி அது!
பிக்குகளின் உதடுகள் தம்மம் உச்சரிக்கும் முன்
திக்குகள்,
எல்லைகளைத் தமிழால் தீர்மானித்த நாடு அது!

நாற்பது ஆண்டுகள்
அனுராத புரத்து அரியணையில்
அறத்தை
அமர வைத்தவன் எல்லாளத் தமிழன்,
அறங்கூறு அவையத்தில்
நடுவு நிலைமையை
நிரந்தரமாய் நியமித்து வைத்தவன் அவன்

மகாநாம மகாதேரரின்
செரிமானம் இழந்த சிந்தனைகள்
பொருமின;
துட்ட காமினிகளுக்காகச் சூழ்ச்சிச் சூத்திரங்கள்
சுடச்சுட
சுட்டெடுத்துக் கொடுக்கப்பட்டன.

ஆனால்

தமிழர் வரலாறு வேர்பாய்ச்சியிருந்த

வையாப் பாடல், கைலாயமாலை

வெளிச்சம் இழந்த வெளிகளில்

புதைக்கப்பட்டனவே – அது எவரால்?

'யாழ்ப்பாண வைபவ மாலை'ப்

பூக்கள்

புறக்கணிப்பு முற்றங்களில்

உதிர்க்கப்பட்டனவே – அது எவரால்?

தோல்வியின் மடியில்

தமிழ் மன்னர்களும் தமிழ் மக்களும்

துவண்ட கதையைப்

பதிவு செய்ய வந்த

சிங்கள வரலாறு எழுதிகள்,

உண்மை உறங்கும் நேரங்களில்

தங்கள் நூல்களை

உறங்காமலிருந்து எழுதினர்.

பாதி இருளும் பாதி ஒளியுமான
கலவைத் தருணங்களில்
எல்லாள மன்னன்மீது தேமல்போல்
படர்ந்தது
புகழா? இகழா? இரண்டுமா?
அவனுக்குத்
துட்ட காமினி கட்டிய சைத்தியத்துள்
தேடிப்போன காலம்....
இடப்புறம் வலி எடுத்த மார்போடு
இன்னும் அங்கேயே
உட்கார்ந்து கொண்டிருக்கிறது.

ஆனால்
அந்தச் சைத்தியத்து உள்ளிருந்து
ஆயிரம் பல்லாயிரம் தமிழர்களின்
அழுகுரல், விம்மல், தேம்பல், அலறல், கதறல்
வெள்ளமாய்த் ததும்பி வெளியே
பாய்கின்றன.

எல்லாள மன்னன் மரணம்
திரும்பத் திரும்ப
நிகழ்கிறது – வேறு வேறு பெயர்களில்.
தளபதி தீத்தம்பன் சாவு
வஞ்சகத் திட்டங்களால் – ஒப்பந்தங்களால்
மறுபடியும் மறுபடியும் படைக்கப்படுகிறது
வேறு வேறு பெயர்களில்.

மரணத்தின்
கருவறையிலிருந்து மாவீரர்கள்
தொடர்ந்து பிறப்பார்கள் என்பது தெரியாத
இராசபக்சே உதட்டில்
குருதிவாடை கொப்பளிக்கும்
உத்தரவுகள் ஓயவில்லை.

மகாவிகாரைகளில்
தியானம் முடிந்து உணவுக்கு உட்காரும்
புத்தபிக்குகளின்

தட்டுகளில் வந்து விழுகின்றன
வெட்டப்பட்ட
தமிழனின், தமிழச்சியின் சதைத் துண்டங்கள்.
பச்சிளங் குழந்தைகளின்
தலைகள், கைகள், கால்கள், விரல்கள்,
கண்கள், கனவுகள்.... எல்லாமே!

அசோகச் சக்கர வர்த்தியால்
பவுத்த முழுக்காடி,
'தேவநம்பிய' விருதை
பூச்செண்டாக ஏந்திய திச மன்னன்
மாண்டபின்,
அனுராத புரத்தில்
எல்லாளத் தமிழனுக்கு முன் அரசாண்ட
தமிழர்கள் -
சேனன், குந்தகன்,
பாளி வரலாற்று நூலின் பக்கங்களிலும்
புகழைப் படரவிட்டவர்கள்.

அவர்கள் சிறப்புகளுக்கும்
இப்போது,
முல்லைத்தீவில், புதுக்குடியிருப்பில்,
புது மத்தலனில்
மறுபிரதிகள்
போடப்படுகின்றன.

அடக்கம் செய்யப்பட்ட
மகாநாம மகாதேரர்களின்
சவங்கள்
புரண்டு படுக்கின்றன.

ஈழத் தமிழர்
வரலாற்று ஏடுகளின் பக்கங்கள்
படபடத்து நடுங்குகின்றன
'இன்னும் என்ன நடக்குமோ?'

# இலங்கை - சமயிகள் தொகுப்பு




அளவு 1:2,650,000



# மெட்டுப் போடுவது எது?

**தூ**க்கம் இல்லை; கனவுகளும் இல்லை;
எனவே
ஈழத்துக்கு இது தெரிய நியாயமில்லை.

பாலஸ்தீன
விடுதலைப் போராளிகள்
தமது கனவு வெளிகளைக்
கடந்துவந்து
ஈழத் தமிழ் மக்களை ஆரத்தழுவி
முத்தமிட்டுப் போகின்றனர்.

சிதறடிக்கப்பட்டுப்
பூமிக் கோளம் எங்கும்
கண்ணீர்த் துளிகளாய்த் தெறித்துள்ள
ஈழத்
தமிழ் மகன்களை, மகள்களைப்

பாப்லோ நெருதாவின் பாடல்கள்
ஆயுதக் கைகளால் அள்ளிக் கொள்கின்றன
பெருமூச்சோடும் பெருஞ்சினத்தோடும்.

சேகு வேராவின்
சிவப்புக் கனத்த கண்கள்
திரும்புகின்றன ஈழத்தின் பக்கமாய்;
அதன் விடுதலைக்கு வீரவேள்வி நடத்தும் மக்கள்
பார்வைகளுக்குள்
விடியல் படலங்கள்;

வரலாற்றுள்
சம்பவங்களை நடவு செய்யத் துடிக்கும்
வார்த்தைகளும்
அகதி முகாம்களுக்குள்
அரங்கேற்றமாகும் அவலங்களும்
சந்திக்கும் இடத்தில்
திலீபனின் மரணம்
உண்ணாவிரதத்தைத் தொடர்கிறது.

பாப்லோ பிகாசோவின்
சமாதானப் புறாவின் கண்களிலிருந்து
இரத்தத் துளிகளாய்
விழுந்து கொண்டிருக்கும் ஈழத்தமிழர்கள்
எப்போது
எந்தத் சித்திரத்தில்
புன்னகையின் தூதுவர்களாக,
புலரியின் புதல்வர்களாக வெளிப்படுவார்கள்?

பால்ராப்சன் பாடல்கள்–
வவுனியாக் காடுகளில் முல்லைத்தீவில்
ஓசைகள் உதிர்ந்த தாய்மார்கள் தாலாட்டுகளில்
துயரங்கள் பிதுக்கச்
சீழ்வடிக்கின்றன.

'தென்திசையைப் பார்க்கின்றேன்
என்
சிந்தை அணு ஒவ்வொன்றும்
பூரிக்குதடா' என்று பாடிய
பாரதிதாசன்,
'குறிஞ்சித் திட்டில்' தயார் செய்த
கொலைவாள்களைக் கொடுத்தனுப்புகிறார்
ஈழத்திற்கு.

இப்போது
ஈழத்தமிழன்
மரணத்திற்கும் வாழ்வுக்கும்
இடையிலான கடைசிப் பாட்டிற்கு
மெட்டுப் போடுவது எது?

அடிமைத் தனத்தை எவர் மீதும்
பிரகடனம் செய்யும்
ஆதிக்க வெறியா?
விடுதலைக் கீற்றை இரவுகளிலிருந்து
கிள்ளி எடுக்கும்
வெளிச்ச விரல்களா?

35
ஈரோடு
தமிழன்பன்



# ஈழச் சாவுகளும் சலனமற்ற எழுத்துகளும்

**கா**லை,
தாமரை பூக்கும் நேரம் அல்ல;
இரவு,
அல்லி மலரும் நேரம் அல்ல
ஈழத்தில்.

நாள்களைச்
சிங்களக் கழுகுகளின் அலகுகள்
திறக்கின்றன மூடுகின்றன.
அவற்றின் இறுக்கமான இரும்பு நகப்பிடிகள்
நேரங்களை
நிரப்புகின்றன தமிழ்ப்பிணங்கள் கொண்டு

கறுப்புக் கனவுகளின்
பாதை நெடுகிலும் காயப் பசியுள்ள
ஈட்டிகள் நிறுத்தப்பட்டுள்ளன.

நனவுகளின்
மார்பிலிருந்து இரத்தம்
பவுத்த நெடியோடு பாய்கிறது
குறுக்கும் நெடுக்குமாய்
ஈழத்தில்.
தமிழ்மொழி பதைக்கிறது;
தமிழ் இயல், தமிழ் இசை, தமிழ்நாடகம்
எல்லாமே –
போராடும் தமிழன் கைகளில்
ஆயுதங்களாகிவிடத் தவிக்கின்றன

இங்கோ
தமிழனின் பதைப்பும் தவிப்பும்
வேவு பார்க்கப்படுகின்றன;
விசாரணைக்குள்ளாகின்றன;
அர்த்தங்கள் மாற்றி வைக்கப்பட்டுத்
தடை செய்யப்படுகின்றன

பூண்டோடு
தமிழினம் பொசுக்கப்பட்டதாக
வேர்களற்ற – அறிவிப்பைத்
தயாரித்து வைத்து வெளியிட
அவசரப்படுகின்றன ஊடகங்கள்

ஆதிக்க வல்லாண்மைகள்
இரத்த தாகமுள்ள வரலாற்றின் பக்கங்களில்
உள்நாட்டுப் பிரச்சினை
இதுவென்று
தமிழினப் படுகொலைகளைச்
சலனமற்ற எழுத்துகளால் முடித்துவிடத்
தீர்மானிக்கின்றன.

கடைசியாகப்
பிறக்கப்போகும் ஈழத் தமிழ்க் குழந்தை
எதைச் சொல்லி அழும்? எப்படி அழும்?
இறந்துபோன
தமிழினத்தின் இறுதிச் செய்தியாக
எதைப் பெறும்
அந்தக் குழந்தை?

மிஞ்சப்போகும் அந்தக் குழந்தை
தமிழினத்தின் விடுதலையாக இருந்தாலும்
நடந்த மரணங்களை
இழப்புகளின் பட்டியலில் இருந்து
வாழ்க்கைகளாய் விடுவிப்பது எப்படி?

அது,
நம்பிக்கையை உறுதி செய்தாலும்
புதைந்து போன
நட்சத்திரங்களை மீட்பது எப்படி?



# இது சத்தியம்

இரவுக்கும் இரவுக்கும்
பிறந்தவர்கள் அல்ல அவர்கள்
பகல்களின் சங்கமத்தில் பிறந்த
பட்டப் பகல்கள்
வெளிச்சத்தைப் புணர்ந்து
விடுதலைத் தாய்
பெற்றெடுத்தாள் அவர்கள் தாய் மொழியை!

அவர்கள்
ஆயுதங்கள் ஏந்தியது அறவழியாகாது;
தெரியும் எனக்கு!
அவர்களை ஆயுதங்கள் ஏந்த வைத்தவர்கள்
அவர்களை அப்படி ஆக்கியதை
என்னோடு சேர்ந்து
ஆயுதங்களும் இரத்தச் சிந்தல்களும்
மரணங்களும் காயங்களும் துயரங்களும்
வன்மையாகக் கண்டிக்கின்றன.

அவர்கள்
ஈழத்து இசைநதி விளிம்புகளில்
பிறந்தவர்கள்
அவர்களிடமிருந்தும் அவர்களின் நதிகளிலிருந்தும்
இனிய
சுதந்தர உருப்படிகள் உடைத்தெறியப்பட்டபோது
அவர்களின்
புல்லாங் குழல்களிலிருந்து
புறப்பட்டன தோட்டாக்கள்.

அவர்கள்
எப்போதோ இருந்த எல்லாளத்
தமிழ் மன்னனின் இதயத்திலிருந்து
தன்மானத் தணலைத் திரட்டுகின்றனர்.
மகாநாம மகா தேரர் போற்றிய
சிங்களத் துட்டகா மினியின் இன்றைய
துரோகிகளைச்
சிங்கள மண்ணில் போய் எதிர்ப்பதற்கல்ல.

அவர்களிடமிருந்து தமது மண்ணை மக்களை
மீட்கவும் காக்கவுமே
தற்காப்புப் போரைத் தயாரித்தனர்.

அவர்கள்
சின்ன அரும்புகளின், சிரிக்கும் பூக்களின்
தோழர்கள்.
பட்டாம் பூச்சிகளோடு பேசவும் வானவில்லோடு
விவாதிக்கவும் அவர்களிடம் வண்ணங்கள் உண்டு.
பனியோடும் மழையோடும் சேர்ந்து அவர்களுக்கு
ஈரத்தை, குளிர்ச்சியை இயற்றத் தெரியும்.
அவர்களின்
குழந்தைகளுக்கு, சகோதரிகளுக்கு,
மயில்களுக்கும் குயில்களுக்கும்
அரங்கம் திறந்து வைத்த மனங்கள் உண்டு.
அவர்களின் நரம்புகளுக்குக்
கண்திறக்கும் நட்சத்திரக் கதைகளும்
பால்பவுர்ணமிகளின்
மகரந்தம் கொட்டும் நாடகங்களும்
அறிமுகமாகாதவை அல்ல.

காலம்
அவர்கள் கபாலங்களில் வெப்பத்தை,
பதுங்கு குழிகளை – சலனங்களை, சாவுகளை
நிரப்பிவைத்த காரணத்தை வரலாறு அறியும்.

இனவெறிப் போரின் முடிவில்
இவர்கள் எல்லாருமே அங்காந்த
சாவுப் பள்ளத்தாக்கின் வாயில்
கொட்டிக் குவிக்கப்படலாம்.
ஆயின்
தனது மண்ணிலிருந்தும் கல்லிலிருந்தும்,
மலைகள், காடுகளிலிருந்தும்,
ஈழத்தாய்,
இரத்தமும் சதையும், எலும்பும் நரம்பும்
சாகாச் சுதந்தர மூச்சும் கொண்டவர்களாய்
அவர்களை
மறு உற்பத்தி செய்வாள் –
இது சத்தியம்.



# எந்தச் சொல் நீயும் நானும்?

இன்னும்
எவ்வளவு காலம் இந்த
இரத்தப் பொழுதுகள்?
இன்னும் எவ்வளவு காலம்
சூரியனைப் புதைக்கும் மரண
உதயங்கள்?

எங்கள் கடல்களின்
எல்லா அலைகளிலும்
உதடு கொப்பளித்த அழுகைகள்...

காற்று நரம்பின்
எல்லா அலைவரிசைகளிலும்
எங்கள் தமிழ் இனத்தின் கதறல்கள்....

சில்லுச் சில்லாய்
நொறுங்கிய வாழ்க்கையுள்
முடிந்து கொண்டிருக்கும்
தமிழின வரலாற்றின்
எந்த அத்தியாயம்? எந்தப் பக்கம்?
எந்தச் சொல் நீயும் நானும்?



ஈரோடு
தமிழன்பன்

கைபிசைந்து
தாயகத் தமிழன் கலங்குவதைப்
பூமி அறியும், வானம் அறியும்
புதுதில்லி அறியவில்லையே!

உடைந்த காற்றுக்குள்
மூச்சுப் பொறுக்கும் தமிழனே!
இது இன்னும் எவ்வளவு காலம்?

கையேந்திய புத்தகப் பையில்
தண்ணீர்ப் போத்தலில்
சோற்றுப் போசியில் –
அப்பா இரத்தம், அண்ணன் இரத்தம்
அண்டை வீட்டு மாமா இரத்தம்
சிறுவர் சிறுமியர்
பாடத்தின்மேல் படிப்பின்மேல் இரத்தம்

நிகழ்கால மார்பு
தோட்டாவால் துளையிடப்பட்டுவிட்டது.
வருங்காலம் – அதன்
கருவறையிலேயே பொசுக்கப்படுகிறது.

சிங்கள இனவெறிக் காடையர்கள்
கைகளில் ஏந்திய
மதுக் கிண்ணங்களில் தமிழ் மழலைகள் இரத்தம்

புத்தனை ஆராதிக்கத்
தமிழ்வாலிபர் கிழவர் கிழவிகள் எலும்புகள்
தம்மம்
படுத்துப் புணரவும்
வெடிவைத்துத் தகர்க்கவும் தமிழச்சிகள்
உடம்புகள்.

மரணம் படர்ந்த – கொடூரப்
போதி நிழலில் கிடக்கின்றன–

சின்னாபின்னமான தமிழினக் கனவுகள்
சிதைந்த வைகறைகள்,
பிள்ளைகள் உதடுகளிலிருந்து
பிய்த்து எறியப்பட்ட மலர்ச்சிரிப்புகள்,
பெண்களின் மார்புகள், பிறப்பு உறுப்புகள்,
தமிழ் அடையாளங்கள்
தணல்பட்டுக் கொதிக்கக் கொதிக்க
இன்னும் - இது
எவ்வளவு காலத்திற்கு?

வேர்கள்
பிடுங்கி எறியப்படுகின்றன
பூமி,
மௌனம் சாதிக்கிறதே?

நட்சத்திரங்கள்
தட்டித் தகர்க்கப்படுகின்றன
விண்,
கண் திறக்கவில்லையே...
இன்னும் இப்படி
எவ்வளவு காலம்?



# அன்பை உச்சரிப்பதில்லை ஆயுதங்கள்

**ஆ**யுதங்கள்
எப்போதும் அன்பை உச்சரிப்பதில்லை.
அவற்றின் மொழியில்
மரணங்கள் பெற்றெடுத்த சொற்களே அதிகம்.
எழுத்துகள் கூட
எலும்புகள் கொண்டே உருவாக்கப்பட்டுள்ளன.
கொலைகளுக்கு
முத்தம் கொடுக்கும் குற்றங்கள்
அறத்தின்
நேர்மை மன்றங்களின் எந்த நியமனத்தையும்
ஏற்பதில்லை.

மறுதலிக்கப்பட்ட
உரிமை ஒளி வற்புறுத்தும்போது
இழப்பதற்கு ஏதும் இனியில்லை என்ற நிலையினர்
ஆயுதங்கள் ஏந்தும் போராட்டத்தை
வருணிக்க,
வரலாற்றின் பக்கங்கள்
காவியங்கள் கனவும்
வார்த்தைகளைத் தேடுவதில்லை.

கல்லறைகளின் எண்ணிக்கையைப்
பூக்களின் எண்ணிக்கையில்
கணக்கு வைக்கும்படி
செடி கொடிகளுக்கு
எந்த மண்ணும் ஆணை பிறப்பிக்காது.

செத்துக் கொண்டிருக்கும்
புன்னகைகளுக்கு எந்த உதட்டிலும்
இடம் கிடைக்க வாய்ப்பு இல்லையே!

நாகரிகமும் நளினமும் நாசூக்கும்
அறியாதது
குருதியில் மின்னலடிக்கும் புரட்சி;
அதைப்போலவே
அதை அடக்கும் – இருளைக் கக்கும்
ஆதிக்க சக்திகளும் அடக்குமுறைகளும்.

பாரிசு என்னும்
பளபளப்பு விழிகளுக்குப் பாதுகாப்பாக
இமைகளைக் கட்டி எழுப்பினான் ஐந்தாம் ஜார்ஜ்;
அந்தக் கோட்டையே
பாஸ்டில் சிறையாகப் பரிணாமம் பெற்றது.

முகம் சிவந்து பிரஞ்சுப் புரட்சி
மூர்க்கம் முதிர்ந்தபோது
அரசியல்வாதிகளால்,
கிளர்ச்சியாளர்களால் அது நிரம்பி வழிந்தது.

பகல்கள் உடைவதும் இரவுகள் கிழிவதும்
காலத்தின் கபாலத்துள்
கனல் கொள்ளிகளைச் செருகின
புரட்சியாளர்கள்
அந்த பாஸ்டில் சிறையை உடைத்தனர்.
கொட்டடியில் கிடந்த அரசியல் கைதிகள்
பட்டறையில் கூரான
வாள்களாய் வேள்களாய் வெளியே வந்தனர்.

1789 யூலை 14;
அந்த நாள்; இந்த நாள்வரை
பிரான்சின் தேசிய தினமாக விழாக்கொடியை
விண்வரை உயர்த்துகின்றது.

உலகெங்கிலும்
சிறையுடைப்புகள் செய்திகளாக
நெருப்பு ஊர்வலம் நிகழ்த்தும் பொழுதெல்லாம்
'பாஸ்டில்'
என்னும் தன் பெயரும் உடன் வருமாறு
ஒரு
ஞாபக ஒப்பந்தம் செய்து கொண்டுவிட்டது.

அந்த
பாஸ்டில் சம்பவத்திற்குச்
சரித்திரம் ஒரு நகல் தயாரித்தது
மட்டக்களப்பில் –
இலங்கையின் கிழக்குக்கடலோர அலைகள்
இன்றுவரை
1983 செப்டம்பர்
மட்டக்களப்புச் சிறை உடைப்பைச்
சிவப்புச் செய்தியாக ஒலிபரப்பிக் கொண்டிருக்கின்றன.

அரசியல் கைதிகள் ஐம்பதுபேர்
விடுதலை பெற்றதே – அந்த அறிக்கையின்
தலைப்புச் செய்தி.

ஆயின்
1983 யூலை 25, 27.
வெலிக்கடைச் சிறைச்சம்பவங்களில்
குட்டிமணி கண்கள் மட்டும்
பிடுங்கப்படவில்லை–

சிறைவெளியில் அரச மரத்தடியில்
தியானித்திருந்த கருணாமூர்த்தி புத்தரின்
கண்களும் பிடுங்கி எறியப்பட்டன.
அரசமரத்தின் ஆயிரமாயிரம் இலைகள்
ஒரு
வன்முறை உதிர்ப்பில்
சிறைவெளிப் பரப்பை
அதிர்ச்சியில் கவலையில் ஆறாத்துயரில் நிரப்பின.

தமிழினம் தனிஉரிமை என்ற கொள்கைக்காகப்
போராடிய வீரர்களைக் கொன்றொழிக்க
அங்கே
சிங்களக் கைதிகள்
கொம்பு சீவி விடப்பட்டனர்
அரச காவலர்கள்
அவர்களோடு
கொலை வெறி உச்சங்களில்
குதித்தாடினர்

காயங்களில் சாய்ந்தவர்கள் உடம்பில்
கம்பிகள் செருகினர்.
சேவல்களின் கழுத்தை அறுப்பது போல்
சிரங்கள் அறுத்தனர்.
காய்கறி நறுக்குவதுபோல்
கைகால்களைத்
துண்டு துண்டாக்கினர்.

குட்டி மணி பால் உறுப்பை
வெட்டி எறிந்த கெக்கலிப்பு;
செத்துக் கொண்டிருந்த
போராளிகள்
இரத்தம் அள்ளி எடுத்துத்
தம்முடம்பில் பூசி
ஆரவாரம் செய்த
சிங்களர் கொக்கரிப்பு.....
வெலிக்கடைக் கேவலம் – வேறு
எந்தச்
சிறைக்கும் ஏற்பட்டிருக்காது!

பூமியின் சதையில்
வெட்டுகள் விழுவதை எவரும் தடுக்கவில்லை!

காற்றுள் மறைந்து கிடந்த
ஈழ யாழ்களின் இசை மூச்சுகள்
தகர்க்கப்படுவதிலிருந்து தப்ப முடியவில்லை!
வாள்கள் பிளந்த
தமிழ் வார்த்தைகளின் கடைசி அலறல்கள்
காயத் தெப்பங்களில்
இன்னும்
கடக்க முடியாத கால வெள்ளத்தில்...



# எரிந்த யாழ் நூலகம்

அநாகரிகம் ஓர் அகராதி தயாரித்தால்
காமினி திசநாய்க்க என்பதற்குக்
கபடம், வஞ்சகம் போன்ற
பல நேர்பொருள்கள் கிடைக்கும்.

சந்திரிகாவை
வெல்ல அதிபர் தேர்தலில்
வந்து நின்றதால் (1994)
கூட்டம் ஒன்றில் குண்டு வெடித்துக்
காற்றிலும் மண்ணிலும்
சேறு தெறித்ததுபோல் அவன் மரணச்செய்தி
நாற்றம் எழுப்பி நான்கு திசை படர்ந்தது.

எனினும்
புத்தவிகாரைப் படிக்கட்டுகள்
திடுக்கிட்டு வெடிக்கவில்லை.
புத்தரின் தியான வெளிமேல்
கீறல்கள் விழவில்லை.

அதிபர்
சந்திரிகா பருகிய
ஒரு காலை நேரக்கோப்பைத் தேநீரில்
காமினி மரணம்
இரண்டு சொட்டுத் துயரமாகக் கூடக்
கலக்கவில்லை.

கனவுக்குள்ளும்
பத்துத் தமிழரையேனும் முடித்துவிடாமல்
தூக்கம் கலைவது
சம்மதம் இல்லை அவனுக்கு!

யாழ்ப்பாண நீரேரியில்
எந்த அலையிலும் அவனுக்காக
நெகிழ்ச்சியில்லை!
கயிறுகளாகி அவன் பெயரை இறுக்கவே
அலைகள் ஆத்திரப்பட்டன.

பனைமரத்து உச்சிகளில்
நுங்குகளுக்குள் கந்தகம் போட்டுத்
திரி கொளுத்தக் காடுகள் அவசரப்பட்டன.

வெங்காய வீடுகளுக்குள்....
நெடியடித்துக் கிடந்தது தோல் உரியப்பட்ட
அவன் உடம்பு.

மிளகாய் விதைகளை
ஊடறுத்துப் பாய்ந்த காரத்துள்
தமிழ் மக்கள் கோபம் இருந்தது.

ஏனெனில்
இவன்தான் யாழ்ப்பல்கலை நூலகத்தைக்
கனல் மூட்டி எரிக்கக் காரணமானவன் (1981)

தொண்ணூறாயிரம் புத்தகங்களைத்
தொல் தமிழரின் அறிவுச் செல்வங்களைக்
கொளுத்தித்
தமிழ் அடையாளங்களுக்கு முடிவுகட்ட
முடிவு எடுத்தவன்.

யாழ்ப்பல் கலை நூலகம்
சாளரக் கதவுக் கைகளால்
மார்பில் அடித்துக் கொண்டு அலறியது.

'தொல் தமிழ் இலக்கியங்கள் எரிகின்றனவே
தொல் தமிழ் இலக்கணங்கள் எரிகின்றனவே'
காவியங்களில் வாழ்ந்து கொண்டிருந்த
பாத்திரங்கள் பற்றி எரிகின்றனவே!
கதைகளை, சம்பவங்களைச் சாம்பல்கள்
மூடினவே!

காமினியின்
ஒருமிடற்று மதுவுக்குத் தொட்டுக்கொள்ளச்
சிங்களக் காடையர்கள்,
ஆயிரம் பல்லாயிரம் தமிழ்ப்பனுவல்களை
நெருப்பு ஊறுகாயாக்கிவிட்டனர்.

'எரிக்காதீர்'
என்று கதறிய ஆறுமுக நாவலர் குரல்
நூலகம் முழுவதும் எதிரொலித்தது.

‘இது வேண்டாம்’
என்று மன்றாடிய
சி.வை.தாமோதரனார்
அழுகை
நூலக அடுக்குகளைத் தொட்டுத் தொட்டுத்
தடுக்கப் பார்த்தது; முடியவில்லையே!

ஈழத்துப் பூதன் தேவனார்
நற்றிணை முற்றம் கடந்து குறுந்தொகைக்
கதவு திறந்து
அகநானூற்று வாசலில் வந்து
‘தகாது இது! தகாது இது!
எதற்கிந்தப் பகை? எதற்கிந்த வெறி?

தமிழரும் நீங்களும் இந்த நாட்டின்
சம உரிமைக் குடிமக்கள்
இந்த உண்மைக்கா நெருப்பு முழுக்காட்டு?
நிறுத்துங்கள்’ என்றார்.
நிறுத்தவில்லையே –
உடம்பின்
திசுக்களில் எல்லாம் இன வெறி
திணித்து நிரப்பிய திசைநாய்க்க–ஆட்கள்!

இறந்து போனபின்
தனது பிணத்தைப் பிரதி எடுத்துப்
புத்தகங்கள் இருந்த பேழைகளில் எல்லாம்
அடுக்கும்படி ஆணை போட்டிருப்பானோ
அந்தத் திசை நாய்க்க?

தை மாதத்தை இழந்திருந்த
தமிழாண்டு போலவும், தமிழாண்டு இழந்திருந்த
தமிழரைப்போலவும் இருந்தது
யாழ்ப்பாணம்.



# ஒரு வசந்தத்தில் உங்கள் வாழ்க்கை

உங்களைப் புதைத்துவிட்டார்கள்
வீரவேங்கைகள் வரிசையில்
காலம் படித்துக் கொள்ளவும் பார்ப்பவர்கள்
மனங்களில்
பதித்து வைக்கவும் உங்கள் பெயரும் பீடும்
கருங்கற் பலகைகளில்
வரலாறாக மின்னிக்கொண்டிருக்கின்றன.

உங்கள் காயங்களும் இரத்தக் கசிவுகளும்
துடைக்கப்படவில்லை
மைப்புட்டியும் மையுமாக அவை ஒரு வேளை
பூமிக்கடியே தேவைப்படலாம்
உங்கள் கண்கள்கூடத் திறந்தபடியே இருக்கின்றன.

கனவுகளில் தூக்கங்களில் நீங்கள் ஏமாறும்
தருணங்களில்
நடந்த சம்பவங்கள் மேல் சாம்பல்கள்
கொட்டப்படாமல் இருக்க வேண்டும்
உங்கள் மரணத்தை நீங்கள் பார்த்தபடியே
இருப்பது நல்லது என்பதை உங்களுக்கு வாழ்க்கை
கற்பிக்கவில்லையா?

பூமிக்கு அடியே
பாளம்பாளமான தங்க அடுக்குகளிடையே
நீங்கள் செருகி வைக்கப்பட்டிருக்கிறீர்கள்.

விடுதலைத் தாயகம்
அணிகலன்கள் ஆக்கும்போது
ஆழங்களிலிருந்து மேலே நீங்கள் வருவீர்கள்!

உங்களை உருக்கித்
தொட்டில் குழந்தைகளுக்குப் புன்னகைகள் தயாரிக்கப்படும்
பள்ளிப் பிள்ளைகளுக்கும்
பாடநூல்கள் தயாரிக்கப்படும்

புதியதான பாடத்திட்டத்திற்கு
ஒரு இரத்த மரியாதை வரும்

கடந்த திசம்பர் 2008இல்
கிளாலிப் பகுதியில் நடந்த மாபெரும் சமரில்
உங்கள் மரணங்கள்
ஒரு பாரகாவியத்தைப் புனைந்து கொடுத்தன.

இனவெறிச் சிங்கள அரசுப் படையில்
கிளாலியில் மட்டுமே
நாற்பதுபேர்
உம் வெப்பம் கொப்பளித்த கோபத்தில்
குப்புற விழுந்தனர்.

புத்த பூமியை யுத்த பூமியாக்கிய
சிங்கள இனப்பகை அரசு முகம்
அவமானக் கீறல்கள் விழுந்து கவிழ்ந்தது.
ஊடகப் பொய்கள் ஒத்தடம் கொடுத்தபடி
உலகை ஏமாற்ற முற்பட்டன.

களப்பலியான சிங்களப் படையினரின்
தளவாடங்களில்
தடயங்களாகக் காட்டு விலங்குகளின்
ரேகைகள் இருந்தன. சில்லிட்டு உறைந்துபோன
மூர்க்கப் பதிவுகள் இருந்தன.

விடுதலைப் போராளிகளே!
உமது புகழைவிட ஒளிமிக்கதன்று
சூரியன்!
உமது தாயகப் பற்றைவிட ஆழமானதன்று
இந்து மாக்கடல்!

இறுதி மூச்சின்போது உமது
விழிகளுக்குள் வந்து தெறித்த மின்னல்விதைகள்
ஈழ மண்ணெங்கும் விழுந்தன.
உங்கள்
வாழ்க்கைக்குப் பெயர் ‘வசந்தம்’ என்றில்லை.
ஆனால்
உங்கள் மரணம்
எதற்குவசந்தம் என்று பெயர் சூட்டப்போகிறதோ
அதனுள்
நிச்சயம் உங்கள் வாழ்க்கை!



# ஈழத்துப் பூதன் தேவனார் கவிதையில் ஒரு கலவரம்

ஈழத்துப் பூதன் தேவனார்
இயற்றிய குறுந்தொகைப் பாட்டா
புலியின் இரத்தத்தால் சிவந்து கிடக்கிறது?
இல்லை....
மதயானை மத்தகம் பிளக்கப்போய்
அதன்
கூரிய தந்தங்கள் குத்திப் பலியாகிவிட்ட
நெருப்புவாய்ப் புலியா கிடக்கிறது?
சொற்களைத் தொட்டுப் பார்த்து அகவலோசை
சுட்டுக் கொண்டது கைகளை;

அண்ணல் யானையின்
ஆயுதப் பிறைகள்
பாட்டை முடித்துவிட்டுப் படுத்த
பூதன் தேவனார் கனவுக்குள் புகுந்து
புலிகளோ கவிதைகளோ
இன்னும் உள்ளனவோ என்று
குத்திக்குத்திப் பார்த்துக் கொண்டிருந்தன.

அசப்பில்
அசல் புலியென மருளச் செய்யும்
வேங்கை மரத்தின் வாடிய கிளையொன்று
கிடப்பதை
இறந்த புலியென்று படப்பதிவு
செய்து வைக்கிறார் புலவர்.

வேங்கை மரத்தை
வேரோடு வீழ்த்திய கோடைக்காற்றின்
மையத்தில்
யானையின் வெற்றி அசையாது நிற்கிறது.
புலியை இழந்த துயரம்
கவிதை மையத்தில் கலவரம் மூட்டுகிறது.

பூதன் தேவனார்
அந்தப் புலியின் உறுமலோடு
தன்னை
அறிமுகம் செய்துவைக்கத்
தவறியதை எண்ணிக்
குறுந்தொகைச் செய்யுள்
மறுகித் தவிக்கிறது.

தன்னை இயற்றிய புலவன்
இறந்தபோது
வருந்தாத இந்தச் செய்யுளால்
தன்னுள்
ஒரு புலி மரித்துப் போனதைத்
தாங்கிக் கொள்ள முடியவில்லை இன்றுவரை.

தலைவியைத்
தலைவனோடு புறப்பட்டுப் போய்க்
காதல் சாதனை
நிகழ்த்தும்படி தோழி நிர்ப்பந்திப்பதற்காக,

ஊக்கத்தின் உரைகல்லான
ஒரு புலியை
யானையைக் கொண்டு தாக்கிக்கொன்றது
என்ன நியாய மென்று
குழம்பிப் போயிருக்கின்றன குறிஞ்சிக்குன்றுகள்

அன்றைய தலைவியின் தலைவனின்
தமிழ்ப் பரம்பரைக்கு
இன்று எந்தப் புலியாலும் யானையாலும்
தொல்லைகள் இல்லவே இல்லை.

ஆனால்
சிங்கள விமானப் படைகள் போடும்
மூர்க்கக் கொத்தாணிக் குண்டுகளால்
முறுவல்கள், முத்தங்கள்,
தேனிலவுகள், மழலைச் செல்வங்கள்
ஒன்றும் மிச்சமின்றிக்
கொன்று குவிக்கப்படுகின்றன.

ஈழத்துப் பூதன் தேவனாரின்
அகவற்பாவில் கொல்லப்பட்ட புலியைப் போற்றி
அவர் பாடாதுவிட்ட



வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா, மருட்பா
எல்லாவற்றிலும்
புலிகள் உறுமும் ஓசை இன்னும் எனக்குள்
கேட்டுக் கொண்டே இருக்கிறது.

இறந்துவிட்ட
பூதன் தேவனார் எப்படி உறங்குவாரோ
தெரியவில்லை.
கதவுகளை உடைத்து நொறுக்கும்
புலிக்கனவுகளை
எப்படித் தடுப்பாரோ தெரியவில்லை.



# எது மிச்சமானது?

கிளிநொச்சி மண்ணை
வெடிகுண்டுகளால் விமானங்கள் உழுதன;
சீறும் சிங்கள
வான 'வண்டுகள்' இரைச்சல்
உறக்கத்தை – அமைதியைச் சிதைத்தபோது
ஓர் அறைக்குள்
ஓர் இடத்தில்
ஓர் ஒற்றைப் புள்ளிக்குள்
ஒடுங்கி நடுங்கின தமிழ்க் குடும்பங்கள்.

எங்கள் குடும்பம்
இனி அங்கிருக்க முடியாதெனக்
கனகராயன் குளத்திற்குப் போய்ச் சேர்ந்தது
மூட்டை முடிச்சுகளோடு.

அம்மா, சுதிப்பெட்டியோடும் கொஞ்சம்
துணிமணிகளோடும், படமாய்விட்ட அப்பா படத்தோடும்;
தாத்தா, கைத்தடியோடும் கைக்குடையோடும்
மருந்துப் பையோடும், மூட்டு வலியோடும்;

தம்பியும், தங்கையும்
பாடப் புத்தகங்களோடும், பள்ளி உடுப்புகளோடும்,
பள்ளிக்குத் திரும்பிப் போகமுடியுமா
என்ற வினாவோடும், ஐயத்தோடும்.

கனகராயன் குளத்தின் கோவிலில்
சுமைகள் இறக்கி,
வேர்வையை, கண்ணீரை
விரல்கள் துடைக்கும் முன்

அரசுப்படை
அரக்க 'வண்டுகள்' உறுமல் –
வீடுகள் பிளக்கும் ஓசை, வீறிடும் அழுகை ஓலம்,
கோவில் சுவர்களில்
வெடிமின்னல் வீழ்த்தும் தெறிப்புகள்

அங்கிருந்து
விரட்டப்பட்ட பறவைகளாய்
அக்கராயன் குளத்திற்கு அச்சச் சிறகடிப்புகள்.

ஆயின்
புலிகளின் வேகமும் கோபமும்
விடுவித்தன கிளி நொச்சியை;
உதைபட்டுச் சிங்கள அலைகள்
பின்வாங்கின.

உடைந்த உதட்டுக்கு
உலர்ந்த புன்னகை திரும்பியது போல, எம்
குடும்பம்
திரும்பியது மறுபடியும் கிளிநொச்சிக்கு.

முணகும்
சுதிப் பெட்டியோடு அம்மாவும்
கம்பிகளின்
நம்பிக்கை குறைந்த கைக்குடையோடு
தாத்தாவும்,
கீறல் விழுந்த கண்ணாடிக்குள்ளிருக்கும்
அப்பா படத்தோடு தங்கையும்
மிச்ச சொச்சமான
துணி மூட்டை, புத்தகப் பைகளோடு
தம்பியும்
உள்ளே நுழைந்தபோது...
தனிமையில் விட்டுச்
சென்று விட்டீர்களே என்று வீடு
அழுதது.

வீட்டு வாசலில்
வாடிப் போயிருந்த முல்லைக்கொடி
அழுதது.
உள்ளே இருந்து
அடுப்படி கடந்து ஒடுங்கியும் நடுங்கியும்
வெளியே வந்த பூனை
அழுதது.

புகையும் நெஞ்சங்களோடு
புகைந்தது வீட்டு அடுப்பும் சில நாள்கள்.
அவர்கள்
புலிகளின் ஆதரவாளர்கள் அல்ல; ஆனால்
புலிகளைத் தவிர
வேறு ஆதரவும் அவர்களுக்கு இல்லை.
சிதறுபடாத
ஒரு தேதியைக்கூட, காலம் அவர்களுக்கு
நாள் காட்டியில்
விட்டு வைக்கவில்லை.

பயந்தும் பக்தியில் உறைந்தும்
அம்மா பாடும்
பதிகங்களிலும் பண்களிலும்
பதியத் தொடங்கின தோட்டாக்கள்.

சுதிப் பெட்டியின்
அடிப்பகுதிகளில்
அடுக்கி வைக்கப்பட்டிருந்தன
மரணங்கள்.

மறுபடியும்,
அரச விமானப்படை
ஆகாயம் பிளந்தது;

தாத்தாவின் கைத்தடி
மிச்சமானது;
கைக்குடை மிச்சமானது;

தாத்தா
மிச்சமாகவில்லை.....

பாடநூல்கள் மிச்சமாகவில்லை
விளையாட்டுப் பொம்மைகள் மிச்சமாகவில்லை
பள்ளிக்குக் கொண்டுபோகும்
சோற்றுப் போசிகள் முதுகில் தொங்கும் பைகள்
மிச்சமாகவில்லை.
விளையாட்டுப் பந்துகள் மட்டைகள்,
முத்தையா முரளீதரன், தெண்டுல்கர் படங்கள்
மிச்சமாகவில்லை;
குற்றுயிரும் குலை உயிருமாய்த்
தம்பியும் தங்கையும் மிச்சமானார்கள்.

தங்கை,
தொலைபேசியில்
அவுஸ்திரேலியாவில் இருக்கும்
அண்ணனிடம் கதைத்தாள்:
அம்மா மிச்சமானதை; அவள் சூதிப்பெட்டி
மிச்சமானதை;
அவள் கைகள் மிச்சமாகாமல் போனதை.

அழுகை அடுக்குகளின்கீழ்
அவர்கள் உயிர்ப்புகளை
வெப்பங்கள் தயாரித்தன.
வெந்து முடிந்த கனவுகள் தயாரித்தன.

அம்மாவின் கைகள்
ஆசையோடு எம்மை அள்ளி எடுத்து
வளர்த்த கைகள்
அமுதூட்டி அணைத்த கைகள்;
பள்ளிக்கு எம் கைகளைப் பிடித்து
அழைத்துப் போன
பாசம் மிக்க கைகள்;

எம்
கன்னங்களைத் தடவிய கைகள்;
கருணை மிகுந்த கைகள்
இன்றில்லை.
தலைவலி என்றால், உடல் வலி என்றால்
தைலத்தோடு தன்னிதயத்தையும் வைத்துத்
தடவிய கைகள்
இன்றில்லை.

எந்த
ஒப்பந்தம் நிறைவேற
அக் கைகள் தேவைப்பட்டன?
பண்டா – செல்வா?
டட்லி – செல்வா?
செயவர்த்தனே – இராசிவ்?
எந்த ஒப்பந்தம் நிறைவேற
எம் அன்னையின் கைகள் பறிக்கப்பட்டன?

எந்தச்
சமரசப் பேச்சின் முடிவில்
எம் அன்னைக்குக் கைகள் திரும்பக் கிடைக்கும்?

இருப்பவர்கள்
அந்தரங்கத்தில் அக் கைகள்
அசைகின்றன
'எந்த ஒப்பந்தத்தையும் நம்பாதீர்கள்!'

இறந்தவர்களின்
இறவா இலட்சித் துடிப்புகளுக்குள் போய்
அக் கைகள் உயருகின்றன.
'எம்மை இழந்தவள் துயரங்கள்
உங்கள் வெற்றியால் ஈடுகட்டப்படட்டும்!'

வெடி நெடியுடன்
வீட்டில்
உடையாது கிடக்கும்
அம்மாவின் சுதிப் பெட்டியில் வைத்துக்
குடும்பத்தின்
கொஞ்சநஞ்சம் இருந்த
மகிழ்ச்சி –
மங்கலான குதூகலம்,
கொண்டாட்டம்
பேச்சு, தயங்கி வெளிப்படும் சிரிப்பு –
எல்லாம்
அடக்கம் செய்யப்பட்டுவிட்டன.



# அவர்கள் திரும்பவும் வருவார்கள்

**தொ**ட்டில்கள்
கட்டி வைக்கிறோம்; தமிழகத்தில்
தாலமுத்து நடராசர்களை
இட்டு வளர்த்த தொட்டில்களைச்
சாயல்களாய்க்
கொண்ட
ஈழத்துத் தொட்டில்களை
மீண்டும் கட்டி வைக்கிறோம்.

தனிச் சிங்களச் சட்டத்தைச்
சினம் திறந்த இதயத்தாலும் அறம் திறந்த
அணுகுமுறையாலும்
அன்று ஈழத்தில் எதிர்த்த எம் தமிழ்மக்கள்
திரும்பவும் பிறப்பார்கள் என்று
தொட்டில்கள் கட்டி வைக்கிறோம்.

பெயரிடப்படாத இடிகளில் இருப்பவர்கள்
இருளைப்
பிளந்து வராத மின்னல்களில் இருப்பவர்கள்
பிறந்து வருவார்கள்

துப்பாக்கிகளை உறங்க வைத்துவிட்டுக்
கோபங்களை எழுப்பியவர்கள் அவர்கள்;
கோபங்களையும்
தீப்பந்தங்களில் நிரப்பாமல்
அகல் தீபங்களின் இதயங்களில் அமர்த்தியிருந்தவர்கள்,
அவர்கள்;

ஈழத்து நதி இழைகள் பின்னிய தமிழிசை
அம்பலம் ஏற
அருகதை அற்றது என்றபோதும்
தமிழின் அகல நீளங்களைத் தகர்த்துச்
சிங்களத் தேருக்குச்
சாலைகள் சமைக்கப்படும் என்றபோதும்

கூரிய பற்களையும் ஆயுத நகங்களையும் கொண்டு
பிரகடனம் ஆகத்துடித்த
கொதிப்பு மையத்தில்
புத்தர் பிரான் சிலையை நிறுவிவிட்டு
அறவழிப் போராட்டத்தை
அன்னை மொழிக்காக நடத்திய அவர்கள்;

இன்னும் ஒரு முறை இப்போது பிறப்பார்கள்
என்று
தொட்டில்கள் கட்டி வைக்கிறோம்.

துட்ட காமினி மரபணுத் தொடர்ச்சி
விசயன் பரம்பரை –

சிங்கள மொழிக்கே சிம்மாசனம் என்று
சட்டம் போட்டு
எதிர்க்கும் தமிழ்விதை இனி எந்தத்
தமிழச்சி வயிற்றிலும் வளரக் கூடாது என்றது.

தேயிலைத் தோட்டங்களில், தென்னந் தோப்புகளில்
பால் மரக் காடுகளில்
காற்றும் இனிமேல் தமிழைக்
கைவிட வேண்டும் என்றது.

தமிழ்மொழி வெளிச்சத்தை வெளியிட நினைத்தால்
விளக்குகளும் இனி
அடித்து நொறுக்கப்படும் என்றது;
அப்போது
சாதியை, மதத்தை, மற்றுள சார்புகளை
ஓரங்கட்டிவிட்டு
ஒன்றுபட்டுத் தமிழர்களாய் உருவெடுத்த
அந்த மாவீரர்கள்
மறுபடியும்
பிறந்து வருவார்கள் – என்று
தொட்டில்கள் கட்டி வைக்கிறோம்.

அன்று
காலிமுகத் துறையில்
போலி முகமற்ற தமிழர்கள் அறவழிப் போரில்
தனிச் சிங்களச் சட்டத்தை

எதிர்கொண்ட வேளை
இருளின் புத்திரர்களான சிங்களக் காடையர்கள்
வன்முறையை முன் மொழிய
அரசகாவலர்கள் அதை வழி மொழிந்தனர்.

தமிழ்த் தந்தை செல்வாவின் செல்வர்கள்
காடையர்களால்
அவர் கண்முன்னாலேயே
இரத்தக் காயங்களுக்குள் திணிக்கப்பட்டனர்.
அமிர்தலிங்கம்
நெற்றியைத் தாக்கிய சிங்களக் காடையர்கள்
கற்களில்,
குகைநாள் மானுட அடையாளங்கள் பதிந்தன.
இச்சம்பவம்,
ஒருநாள் நடவடிக்கை என்று முடங்கி விடாமல்
கலவரத்தை
ஒவ்வொரு தமிழன் வீட்டுக்குள்ளும் அவர்கள்
மூச்சுக்குள்ளும் பேச்சுக்குள்ளும்
விதைத்தது.

1957- பிப்ரவரி 4.
இலங்கையின் விடுதலைநாளைத்
துக்கதினமாகக் கருதும்படியும்
விழாவைக்
கறுப்புநதியில்
கவிழ்க்கும்படியும்
தமிழரசுக் கட்சி
வடக்கு, கிழக்கு மாநிலங்களுக்குக்
கருத்துக் கொடுத்தது.

அன்று
திருகோணமலையே – ஒரு
கரிக்கோண மலையாகிக் கருப்புக் கொடிகளிடையே
புதைந்து கொண்டிருந்தது.
மணிக்கூண்டுக்
கோபுர உச்சியில் கருப்புக் கொடியைக்
கட்டிக் கொண்டிருந்த கைகள்,
இருபத்திரண்டு வயது திருமலை நடராசனுடையவை.
கட்டிக்கொண்டிருந்த இதயம்
கனலும் ஒட்டு மொத்தத் தமிழ்ச் சாதியினுடையது.

மனுவல் டி. சில்வா என்ற
சிங்களக் காடையன் தனது கைத்துப்பாக்கியால்
திருமலை நடராசனுக்குக் குறிவைத்தான்....
மார்பில் துப்பாக்கி ரவையோடு
தமிழ் மண்ணில் விழுந்தது தமிழ்ச் சிம்புட் பறவை!

முதலில்
களப்பலியான – அந்தத்
தமிழ்த்தளபதி மறுபடியும் பிறப்பான்;
அவனைத் தொடர்ந்து அன்றுயிர் நீத்த
அய்யாவு, பிரான்சிஸ் ஆகியோரும் திரும்பவும்
பிறப்பார்கள் என்று
தொட்டில்கள் கட்டிவைக்கிறோம்;

இறவாமல் காற்றில் இன்னும் இருக்கும்
அந்த நாள் கனல்
மூச்சுகளைக் கொண்டே
தாலாட்டுப் பாட்டும் கட்டி வைக்கிறோம்!



# அந்தக் கந்தக பூமியில்

**ப**கலும் இரவும்
சிங்களப் படைகளால்
உடைத் தெறியப்படுகின்றன
அங்கு,
குழந்தைகளும் கல்வியும்
சுட்டுத் தள்ளப்படுகின்றன;
பள்ளிகள்,
பதுங்கு குழிகளுக்குள்.

தாய்க்குலம்
பிறப்பு உறுப்புகளுக்குள்
வன் புணர்ச்சிக்குப்பின்
வெடிவைத்துத் தகர்க்கப்படுகிறது.

நாட்டியக் கால்களும் நாட்டியமும்
துண்டித்து எறியப்படுகின்றன

ஓவியங்களும்
தூரிகை விரல்களும்
வெட்டித் தள்ளப்படுகின்றன.
புன்னகைகளும் உதடுகளும்
பொசுக்கப்படுகின்றன ஒரே நேரத்தில்

கைத்தடிகளும் கண்ணாடிக் கூடுகளும்
சிதறும் திசைகளில்
பறவைச் சிறகுகள் பயத்தில்
படபடக்கின்றன.

கண்களும் பார்வைகளும்
ஆயிரம் பாவனைகளும்
இருள் வெள்ளத்தில் அடித்துச்
செல்லப்படுகின்றன.

காதலும் இளமையும்
கனவுகளும் கற்பனைகளும்
காயக் குழிகளின்
ஆழத்தில் புதையுண்டு போகின்றன.

பாடலும் பண்ணும்
தாளமும் இலயமும்
கொல்லும் ஆதிக்கச் சிங்கள
வல்லூறுகளின்
கூரிய அலகுகளில்...

தமிழும், அதைத்தாங்கிய இதயங்களும்
அந்திம மூச்சுகளில்...

இதுதான்
இன்றைய ஈழம்..

'வியட்நாமில்கூட இப்படித்தானே!'
படங்களில் இருக்கும்
ஹோசிமின் பதைபதைக்கிறார்

'விடுதலைக்குச்
சீனம் கொடுத்த விலைகூட
இப்படித்தானே'
சிலைகளில் இருக்கும் மாவோ
கண்கள் கனல்கிறார்

கியூபாவின்
உடல் அதிர்கிறது
'எனது அனுபவமே
ஈழத்தில் இப்படி மறுபதிப்பாகிறது'

'இழப்பதற்கு
அடிமைத்தனம் தவிர வேறு எதுவும் இல்லை'

இந்தப்
புரட்சி முழக்கம்
நெருப்புப் பெயர்ப்பாகிக்
காற்றில் பற்றி எரிகிறது.

இந்திய விடுதலைக்குப்
போராடிய தியாகத்திலகம்
பகத்சிங் அங்கேதான் இருக்கிறான்.
பகைவரை அழிக்கப்
பாசறை கட்டிய சுபாசு சந்திரன்
அங்கே இருக்கிறான்;

கப்பலோட்டிய தமிழனும் காமராசரும்
தந்தை பெரியாரும்
வெந்து கொண்டிருக்கும்
அந்தக்
கந்தகபூமியில் இருக்கிறார்கள்
அந்தத்
தமிழர்களோடும் ஆயுதங்களோடும்
அடங்கா மறத்திறப் போராட்டங்களோடும்
மரணங்களோடும்.

நாம் மட்டும்
இங்கே இருக்கிறோம்
கதைகள் கேட்டுக்கொண்டும்,
மகாத்தொடர்கள் பார்த்துக்கொண்டும்,
பங்குச் சந்தை நிலவரம்
பார்த்துக் கொண்டும்
சோறு தின்று கொண்டும்
சோம்பல் முறித்துக் கொண்டும்.



# என் அருமை ஈழமே!

ஈழமே!
உனது உடம்பின் எந்தப் புள்ளியிலும்
இப்போது அதிர்வுகளும் அவலங்களும் தவிர
வேறு இல்லையே!

உனது
புல்லின் மெல்லிய ரேகைகளிலும்
வெடிகளும் விபத்துகளுமாய்க்
காலங்கள் உச்சரிப்பாகின்றன

உனது
மரங்களில் குலுங்கும் மதுரக் கனிகளில்
கசப்புகளை நிரப்பி வைக்கும் கைகள்
இன்னும் தண்டிக்கப்படவில்லையே!

உனது காற்றின் இதயத்தில் நஞ்சைக் கலக்கும்
சிங்கள இனவெறிக்கு
ஒத்தாசை செய்பவர்கள் இன்னும்
கண்டிக்கப்படவில்லையே!

உனது
நட்சத்திரங்களை வாயில் அள்ளிப்போட்டுக்
கொறிக்கும் இரத்தக் காட்டேரிகளைத்

தட்டிக் கேட்க
ஆள் இல்லாமற் போனதென்ன?
உனது
மலைகள், காடுகள்
பச்சைப் பிறப்புகள், மகரந்தத் திறப்புகள்
ஊர்கள், தெருக்கள், வீடுகள் யாவற்றையும்
நாசப்படுத்தும் பாசிசப் படைகள்;

பார்வை செத்த உலகுக்கும்
ஏழை நாடுகளுக்குப் பாடைகள் தயாரிக்கும்
ஐ.நா. சபைக்கும்,
ஈழமே! உனது பூமியில்
என்ன நடக்கிறது என்பது தெரியவே தெரியாதா?

ஈழமே!
கண்ணீரிலும் இரத்தத்திலும் நனையும்
உனது நிகழ்காலம் நிரந்தரமானதல்ல;
இன்று செத்து மடியும்
ஒவ்வொரு தமிழனும் ஒவ்வொரு தமிழச்சியும்
நூறு நூறு தமிழனாக நூறு நூறு தமிழச்சியாக
மீண்டும் பிறப்பார்கள் வரலாற்றின் வயிற்றில்!

கொலைவெறிச் சிங்களர்களால்
வெலிக்கடைச் சிறையில்
பிடுங்கப்பட்ட குட்டிமணி, ஜெகன் கண்கள்
ஈழமே!
உனது வெற்றி முகத்தில் பூப்பது
நியாய நிச்சயம்
அந்தக் கண்களிலிருந்து உனக்குப்
புதிய வாழ்க்கையைப் புதிய வசந்தத்தை
நியமனம் செய்வது அறத்தின் நிச்சயம்.



# தேமல் படர்ந்த போலித் தீர்வுகள்

**தி**னம் தினம் ஒரு நாடு
இறக்கிறது;
தினம் தினம் ஒரு நாடு
காலை இரத்த விடியலில் பிறக்கிறது;
பிறந்து
அந்தி நெருப்பில் சடலம் எரிய
முடிகிறது....
இதுதான் தமிழ் ஈழம்.

அதிகாரக் கடிவாளத்தை
இலங்கையிட மிருந்து கைப்பற்ற
நினைத்தல்ல;
சிங்களரை
அந்த மண்ணிலிருந்து அகற்றிவிட
ஆத்திர முற்றல்ல;

தங்கள்
இதயத்தில், இரத்தத்தில் இருக்கும்
தமிழ் மொழியை
இழக்காமலிருக்க;

தங்கள் மூச்சில் பதிந்த உரிமை முத்திரைகளை
அகற்றி,
ஆதிக்க வல்லாண்மை
அடிமை முத்திரைகளைப்
பதிக்காமல் இருக்கப்
போராடுகின்றனர் தமிழர்கள்.

கடத்திக்
காயப்படுத்தப்பட்ட கனவுகளை
எப்படிக்
கண்களுக்குத் திரும்பக் கொண்டுவருவார்கள்?
தெரியவில்லை.

பறிக்கப்பட்ட விளையாட்டுகளோடு
பறிபோன
குதூகலங்கள் – கொண்டாட்டங்கள்
சிறுவர்களின்
அச்சம் படர்ந்த பொழுதுகளுக்குள் திரும்புவது
எப்போது? எப்படி?
தெரியவில்லை.

வீட்டில், ஊஞ்சலில்,
பூசனை அறையில், முற்றத்தில், வாசலில்
பக்தி நேரங்கள் பிலிற்றிய
தேவாரம் திருவாசகம் எல்லாம் –
சிங்கள 'வண்டுப்' படைகள் போட்ட

குண்டுகளில்
உடைந்து நொறுங்கிப்போன
சுதிப் பெட்டிக்குள்
சவங்களாகிவிட்டன.....

இனி
எவர் பாடுவார்? எவர் கேட்பார்?
தெரியவில்லை.

எந்தச் சமையல் அறையிலும்
சமைப்புத் தவிர்க்கப்பட்டு
உணவும் பசியும் – முரண் இயக்கத்தில்

சாவு
தயாரித்துக் கொடுத்த அவர்கள் வாழ்க்கையை
நிம்மதியற்ற நேரங்கள்
ஒரு
துயர நாடகமாய் அரங்கேற்றிக் கொண்டிருக்கின்றன.

அன்று
இலங்கையும் இந்தியாவும்
எழுதி முடித்த ஒப்பந்தம்

இரத்த மகாசமுத்திரத்தில்
குப்புறக் கவிழ்ந்தபோது படகில்

முதலில்,
பதின்மூவர் சைனடு குப்பிக்குள்
விடுதலை பெற்றனர்–
சிங்களப் படைகளிடம் சிக்கிவிடாமல்.
இப்படித்
தேமல் படர்ந்த போலித் தீர்வுகளுக்குள்
தாயகத் தாகம்
தணியாமல் தவித்தனர் தமிழ் ஈழமக்கள்.

காலம்
வெடிவைத்துத் தகர்க்கப்படுகிறது
நிகழ், எதிர் காலங்கள்
இறந்த காலங்களாய் எவ்விதச் சடங்கும் இன்றிப்
புதைக்கப்படுகின்றன.

மவுனம் அனுசரிக்க
அனுமதி மறுக்கப்பட்ட மானுட நேயம்
மண்டியிட்டு
மனம் மறுகிக் கிடக்கிறது
இராசபக்சே சட்டைப் பைக்குள்.



# புனிதவதி முகவரி

சுற்றுலாப் பயணிகளுக்குப்
பாடும் மீன்கள்
தூண்டில் போடும்
மாவட்டம் மட்டக்களப்பு

ஏப்ரல்
சித்திரை முதல் புரட்டாசிவரை
நிலாக் காயும்
ஈர இரவுகளில் ஒரு புதிர் இசை!

காயல் படுகைகளில்
ஒருவகைப் பூனை மீன் இனம்
போடும்
மாநாட்டு ஓசையா?

வெற்றுச் சிப்பிகளுக்குள்
அல்லது
அரிப்பில் அங்கம் சிதைந்த
பாறைகளுக்குள்
பாய்ந்து வரும் நீரின் ஓசையா?

9.7.
ஈரோடு
தமிழன்பன்

எதுவென்று
வியப்புக்குள் விடைதேடும்
வினா இதுவரை
வெற்றி பெற்றதாகத் தெரியவில்லை!

ஆனால் அந்த இசையின் தொண்டையில்
இரும்பு முடிச்சுகள்
இறுகியது போல் கடந்த
எழுபது இறுதியில்
தமிழர் முசுலிம்
தகராறு தழைத்தது.
காயல்கள்
நோயில் விழ,
நரம்பு புரண்ட காற்று,
நாசம் விளைத்தது புயலாக மாறி.

இங்கேதான்
இந்த மட்டக்களப்பில்தான்
இந்தக் காயல் மண்ணில்தான்
இருக்கிறது
களுவாஞ்சிக் குடியிருப்பு....

நாக்கை நீட்டிச்
சூரியனை நக்கி முடிக்க
இருள் முடிவெடுத்த ஒரு நாள்

“தமிழ் ஆண் அகப்பட்டால்
கடலுக்கு;
தமிழ்ப் பெண் அகப்பட்டால்
உங்களுக்கு”

ஓநாயின் புதல்வன்
கோத்தபய இராச பக்சே இப்படித்தான்

வார்த்தைகளை
வறுத்தெடுத்த மாமிசத்துண்டுகளாக
சிங்களப் படைக்கு – முன்னும்
கூலிப்படைகளுக்கும் – முன்னும்
வீசிவிட்டான்.

நாகரிகமானவன்
செய்தால் கூடப் போர் என்பது
அநாகரிகமானதுதான்!
இதில்
அநாகரிகமானவன் போர் செய்தால்
எப்படி இருக்கும்?
அப்படி இருப்பது இராசபக்சேயின்
பேரினவாத வெறியாட்டப் போர்.

கள்ளிலும் சாராயத்திலும்
நுரைத்துப் பொங்கும் போதை
போதுமானதாக இருப்பதில்லை....
படை உடைதரித்த காடையர் கூட்டத்திற்கு.....

தமிழக் கொலைகளுக்கு
முன்னும் பின்னும் திமிரும் உற்சாகத்
தினவேற்றிக் கொள்ள அவர்கள்
உடம்பின்
ஒவ்வொரு திசுவுக்கும் ஒவ்வொரு
தமிழ்ப் பெண் தேவை.

நியாய மனம் படைத்த
எந்தச் சிங்களப் பெண்ணோ ஆணோ
இந்தக்
கொலைபாதகக் குற்றச் செயல்களைக்
கைகட்டிப் பார்த்துக் கொண்டிருக்கப்
புத்தன் சம்மதிப்பானா?
தம்மம் சரியென்று சொல்லுமா?
சங்கம் கண்களை மூடிக்கொள்ளுமா?

எது நியாயம்?
விகாரைகளுக்குள் போய் விடை
தேட வேண்டாம்?
தங்களுக்குள்
தங்கள் மகன், மருமகள்களுக்குள்
தங்கள் அக்காள் தங்கைகளுக்குள்....
வெடித்துக் கிளம்பாதா விடை?

களுவாஞ்சிக் குடியிருப்புக்
கோயிலுக்கு முன்
ஓட்டிச் செல்லப்பட்டனர் ஆண் தமிழர்கள்
கண்களை இழந்த
கடவுளின் பார்வைக்கு முன்னும்
நீட்டிய துப்பாக்கிகளுக்கு முன்னும்
நிறுத்தப்பட்டனர்;

துக்க உடை தரித்த
கடவுள் விக்கித்து நிற்க
வானுக்கும் பூமிக்குமான இடைவெளியில்
பயம், கலவரம், அவமானம்.

மிருகங்களின் கனவுகளுக்குள்
புகுந்து
மிருகங்களை மிரட்டிய மிருகங்கள்
வெளியே வந்து – எம்மினத்
தமிழ்ப் பெண்கள் மீது
காமம் கதக்கியபடி பாய்ந்தது
காடையர் உடம்பு பிதுக்கிய
நஞ்சு – எம்மினத்
தமிழ்ப் பெண்கள் உடம்பில் பரவியது.

வெட்டிக் கொல்லப்பட்டோ
சுட்டுக் கொல்லப்பட்டோ தமிழ் ஆண்களின்
உடம்பு கடல்மீது இன்னும்
வீசப்படவில்லை.

அவர்களின்
காயம்பட்ட பார்வைக்குள்
இருட்டுக்
கீறல் விழுந்த கண்களுக்குள்
காட்சிகளாய்,
கதறியபடி, அலறியபடி, கண்ணீர் வடித்தபடி,
அவர்களின் பெண்கள்

அரைகுறை ஆடையில், ஆடையே இல்லாமல்
வலியின்
அவமானத்தின்
வேதனையின்
பிம்பங்களாக வந்து விழுவதைப்
பார்க்க வேண்டாமா?

பதினான்கு வயதுப் பெண்
புனிதவதி.... அவளுக்குப்
பருவச் சிறகுகள் வந்து
இருபத்தைந்தே நாள்கள் ஆகியிருந்தன.

அந்தச்
சின்னஞ்சிறு தமிழ்ச் சித்திரத்தை
மாறி மாறிச்
சிங்கள இராணுவக் காடையர் ஐவர்
சிதைத்தனர்.

கட்டிப் போடப்பட்ட
தாயின் கண்முன்னால் நடந்தது இது.
காரியம் முடிந்த தென்று
அந்தத் தாயின் உடம்பில்
முற்றுப் புள்ளியைத் தோட்டாவில் எழுதி
வெளியேறினர்.

காலத்தின் உடம்பு
சல்லடையாகத் துளைக்கப்பட்டது
திசைகள் உறைந்து நின்றன.
அந்தச்
சிறுமியின்
'காப்பாற்றுங்கள் என்னை' என்ற
அலறல்
மரணத்தில் உறங்கப்போன
தந்தை செல்வாவைத்
திடுக்கிட வைத்தது!

மாவீரர்களின்
கல்லறைகள் நிறைந்த பூமிக்குள்
சரித்திரம்
ஆத்திரத்தால் கொதித்தது.

அந்தச்
சிறுமியின்
வேதனைத் தகிப்பு
திலீபனைக்
காவு கொண்ட சாவின்மேல்
விழுந்து சிதறியது.

செத்துவிட்டது
அந்தத் தமிழ் மலர் என்று
சிங்களக் காடையர் விட்டுவிட்டுப்போன
சித்தம் கலங்கிய
புனிதவதி இன்னும் இருக்கிறாள்.

இராசபக்சேவைக்
கண்டிக்க வேண்டாம்
கோத்தபய இராசபக்சே மேல்
கோபப்பட வேண்டாம் –

தமிழர்களைக் கொல்வதும்
தமிழச்சிகளைச் சூறையாடுவதும்
இலங்கை அரசின்
இறையாண்மைக்கு உட்பட்டது



இந்திய அரசின்
இறையாண்மைக்கு எதிரானது இல்லை எனில்,
அந்தப்
புனிதவதி சோகத்தைப் பதிவு செய்து வர
பிரணாப்பையோ
சிவசங்கர மேனனையோ
இந்திய அரசு அனுப்பி வைக்கலாம்.

முகவரி:
செல்வி புனிதவதி
பிணியாளர் கூடம் : 17
மருத்துவ நிலையம்
களுவாஞ்சிக் குடியிருப்பு
மட்டக்களப்பு - மாவட்டம்
இலங்கை.



# இறந்த குழந்தைகள் என்ன சொல்லிப் பாடும்?

இயற்கை
வானத்தையும் நிலாவையும்
சூரியனையும்
மழையையும்
வழங்கிய நாளிலேயே
ஈழ மண்ணை
அங்குள்ள தமிழனுக்கு
எழுதிக் கொடுத்தது.

ஒளி
திறந்து வைத்த கவிதைக்குள்
அவன்
வார்த்தைகளாக வாழ்ந்தான்

அர்த்த அடுக்குகளிடையே
அவனைப்
பகல்களும் இரவுகளும் சந்தித்தன.

இலங்கை முகம்
உலகிற்கு அறிமுகமாகும் முன்பே
அறிமுகமானது
ஈழ முகம்

சிங்களர்கள்
எங்கிருந்து வந்தார்கள் என்பது
இலங்கைக்குத் தெரியாது;
எனினும்
தெரியும் அதற்கு –
எங்கள் தமிழன் அங்கேயே முளைத்தவன்
என்பது

கால மாற்றம்....
நிலமிழந்த மரம்
வேர்களைச் சுருட்டி எடுத்துக்கொண்டு
எங்கே
மண் கிடைக்கும்? எங்கே ஈரம் கிடைக்கும்?
என்று மறுகும்
ஒரு வேதனை நிலை....

கால மாற்றம்....
உயர்நிலை உதிர்ந்தது: சமநிலையும் சரிந்தது.
கதிரவனைப்
பறி கொடுத்தவர்கள் கைகளில்
கறுப்பு நட்சத்திரங்கள் கொட்டப்பட்டன

வெளிறிய இரவுகள்
நமுத்துப் போன பகல்கள்
நோய்முதிர் நாள்கள்;
தமிழனின்
பறிபோன உரிமைகளை
நாக்கிழந்த காற்றால் சொல்லித்
துக்கப்பட முடியவில்லை.

எலிப்பொறிக்குள்
வழங்கப்படும் சுதந்திரத்தைத்
தாராளமாக அனுபவிக்கலாம்
தமிழன் என்றது சிங்கள அரசு.

மரத்தில்
ஒரு கிளை இன்னொரு கிளையை
முறித்துப்போடாது

ஆனால்
இலங்கை அரசில் –
சிங்கள இனம் தமிழ் இனத்தை
வேரோடு வெட்டிச் சாய்க்கச்
சட்டக் கோடரிகள் தயாரித்துத் தரப்பட்டன.

எப்போது
ஒரு மரத்துக் கிளைகள் அல்ல
தமிழரும் சிங்களரும் என்பது
புரிந்ததோ
அப்போதே புரிந்தது
தனியரசு தமிழருக்கு வேண்டும் என்பது.

இதற்கென
இறந்துபோன ஆயிரம் பல்லாயிரம்பேர்
இதயம் மட்டும்
இன்னும் இறக்கவில்லை.

கண்ணீரை
மூட்டை கட்டிக் கொண்டுபோன
காலம்,
பூக்களை மூட்டை கட்டிக் கொண்டுவந்து
கொட்டும்போது....
வலி மறந்த – அவர்கள் இதயங்கள்
மகிழ்ச்சியில் துடிக்கும்!

ஈழம் பிறந்ததென்று,
பாடும் குழந்தைகள், இதை அனுபவிக்க
நாங்கள்
இல்லாமல் போனோமே என்று
மரணக் கதவுகளை மோதி மோதி உடைக்கும்.



# புண்களோடும் புரையேறிய வாழ்க்கையோடும்

**இ**ன்றுதான்
இறுதிநாள் என்று இரவு
அறிவித்துவிட்டதால்
வானம்,
தோற்றுப் போய் விடுவதில்லை.
பூமியின்
இதயக் கூட்டில்
துடிப்புகள் நின்றுபோய் விடுவதில்லை

வைகறைகளை
மறுதலிக்கும் அதிகாரத்தைக்
காலம்
யார் கைகளிலும்
தந்து விடுவதில்லை.

போராளிகள்
கொன்றொழிக்கப்படலாம் – ஆனால்
போராட்டங்கள்
தொடரும்.

தமிழ்ப் பிணங்களைக்
குளிப்பாட்டிய நீரே
தாகம் தணிக்கத் தேவை என்ற
வெறிச் சிங்களர்கள்
தொண்டைகளில் – காலம்
விக்கல்களை விதைக்கும்.

யுத்த விருந்து முடிந்து
தமிழர்களின்
குருதியில் கைகழுவிக் கொண்டிருக்கும்
இராசபக்சே
கனவு காணும், பாசிசப்
பவுத்தச் சிங்கள வசந்தத்தின்
ஒவ்வொரு மரத்தின் கிளைகளிலும்
போராளிகள் எலும்புகள் ஆயுதங்களாகத்
தென்படும்.

ஒவ்வொரு பூவிலும்,
கொல்லப்பட்ட தமிழ்க் குழந்தைகளின்
கண்களிலிருந்து
துப்பாக்கிகள் வெடிக்கும்.
ஒவ்வொரு இலையிலும்
சூறையாடப்பட்ட தமிழச்சிகள்
ஊங்காரித்து எழுவார்கள்.

புலிகள்
கொன்றொழிக்கப்பட்டதாக
கோத்தபய பக்சேக்கள்
புளகாங்கிதம் அடையலாம்

புலிகள்
இதயம்,
வரலாற்றுக்குள் வாழ்விடம் அமைத்துத்
துடித்துக்கொண்டே இருக்கும்;

மிச்ச சொச்சமான
தமிழர்கள் குருதி வெள்ளத்தில்
சங்கமமாயிருக்கும்
அவர்கள்
இப்போது
முல்லைத் தீவில் இல்லை; புதுக் குடியிருப்பில்
இல்லை;
வடக்கு, கிழக்கு மாநிலங்கள்
எங்கும் இல்லை.

எங்கெங்கும் இருக்கும்
ஈழத்தமிழர்கள் மூச்சுகளில் இருக்கிறார்கள்.

வீணையை
உடைத்தெறிந்து விடலாம் –
மீட்டப்பட்ட பாட்டு – காற்றில்!
மீட்டப்படாத பாட்டு – விடுதலைக் கனவில்!
கோடிச் சிங்களக் காடையர்களாலும்
உடைத்தெறிய முடியாது.

சரணாலயத்தில் பறவைகள்
கூடியிருக்கும் ஆனால்
கூடுகட்டி வாழ்வதில்லை.

பறப்பதைப் பறவைகள்
மறந்தாலும் – தம் சொந்த நாடும், கூடும்
மறந்து போய்விடுமா?

புலம் பெயர்ந்தவர்கள்
என்கிற பெயரில்
வசதிகள் இருக்கலாம் கொஞ்சம்
வாழ்க்கையும் இருக்கலாம்!
ஆனால்
சுயமரியாதை?

புகலிடம் எல்லாம்
புகழிட மல்ல
அவையெல்லாம்
நகலிடம்!
ஒருவனுக்குத் தாயகமே
அசலிடம்!

மீண்டும்,
புண்களோடும் புரையேறிய வாழ்க்கையோடும்
வாதாடிக் கொண்டிருக்கும்
தாயக மண் கூவி அழைக்கும்போது
ஈர சுவிட்சர்லாந்தோ இனிய கனடாவோ
வேறு
எந்த நாடோ
எப்படித் தடுத்து நிறுத்தும் ஈழமூலத்
தமிழர்களை?

# Always with new insights, new Attitudes and new poems

Erode Tamilanban (Prof.N.Jagadeesan) is a master of Craftsmanship. A winner of many awards he has established himself as a poet of the first order through his independent views incisive thinking his human and humane approach to social problems his vision of a new old order and his mastery of art. His collection of poems titled 'Vanakam Valluva' (Salutations Valluva!) bagged Sahitya Akademi award in 2004. These poems explore the relevance of Thirukkural to modern times using several new devises keeping in view the continuity of the Tamil Literary heritage from the Sangam age. This style is simple and rich. The creative poetic force can be evinced in one way or the other in every poem and the epic character be enjoyed. The work is a significant and original contribution to Indian poetry in Tamil.

Born in what can be called a lower middle class family in a small place called Chennimalai, Erode District, in Tamilnadu. Tamilanban developed a taste for Tamil through the sizable collections of his grandfather. Even his mother had done her own share of reading, an astonishing matter in those days, and bequeathed a few of her books to him. In his school days he had the good opportunity of studying under inspiring Tamil teachers. Even as a school boy Tamilanban published a manuscript 'Suya Chintanai' magazine to carry his writings. He got his higher education in the reputed Karanthai Tamil Sangam and got the diploma of pulavar in Tamil language and literature. He

has served as a Tamil teacher and later a professor of Tamil for a long period.

Like most youngsters in his days, Tamilanban came under the sway of the Dravidian movement and was influenced by the thoughts of Periyar and Arignar Anna, which have made a lasting impression on his thinking. He owes to the Dravidian movement his love for Tamil, faith in the common man and rationalist thinking. It is during this period that he met Bharatidasan, a poet par excellence, and cultivated a bond with him for the rest of the latter's life. His wide reading familiarised him with many out-standing poets of the world, many of whom he introduced to the Tamil readers through translation.

Though all the readings are bound to make their impact on a reader, only a few inspire a writer. Such inspiration, by his own admission, Erode Tamilanban received from Subramania Bharati, Bharatidasan, Rabindranath Tagore and Pablo Neruda. Yet, the essential Tamilanban remained unaffected by external influences, maintaining independent thinking and carving out a path for himself.

Tamilanban published his first collection of poems in 1970, and has published thirty eight collections so far. His earlier poems were made mostly of traditional forms and were largely under the influence of the Dravidian movement. They spoke mostly of the resurgent Tamil nationalism and rationalism as an antidote for the evils of

casteism, communalism and superstitions. Even at that early stage he developed a passion for the ideology of Socialism. It is interesting to note during school days that he attended public meeting addressed by Jayaprakash Narayan and Ashok Mehta and he stated the real reason in his leave letter for which he was rebuked by the headmaster.

His poems published in the eighties and nineties speak of variety of topics and we find his voice coming from the depth of his being, having been seasoned and mellowed by experience in life. He laments the fate of man who locks himself in, rarely reaching out to others, while he must be out, reaching out to the cosmos. In these poems we find Tamilanban engaged, among other things, a spiritual quest, looking out for a place in the cosmos where he can get himself dissolved.

Tamilanban takes care to keep his poems from degenerating into propaganda by using a dramatic monologue or dialogue form where he makes his characters speak. He also puts epic characters to good use. His wide sweep encompasses all facets of human life. Politics, elections, education, judiciary, social life, family bonds, casteism, communalism, inequality, ecology, oppression - there is practically no field of social intercourse that Tamilanban has not touched and put forth his views with a firmness.

In fact wherever he finds injustice, corruption or degene-ration of values, Tamilanban is filled with indignation which he gives vent to, raising his voice against them vehemently, but without sacrificing artistic niceties.

Tamilanban has published a unique travelogue, in the form of poems, on his visit to the United States (which he calls the home of Walt Whitman). He advises the Tamils living there not to give up their cultural roots, keeping in mind that they have gone their as ambassadors of the Tamil Land. At the same time, he is aware of the younger ones being born and brought up in that country who cannot be kept from imbibing the culture of the country of their adoption.

Like Pablo Neruda Tamilanban, 'lives many lives as a poet, shedding each one and its accompanying poetic manner, as a lizard sheds a skin, and emerging always with new insights, new attitudes and new poems.'

He achieves brevity mingled with force of expression by the use of myth and images, epigrams and paradoxes. Many of his titles are examples of how paradox and oxymoron can be taken best advantage of. His poems are all interspersed with puns, humour, satire and irony.

He has also experimented with such forms like haiku, Limericku and senryu, with remarkable agility. It is astonishing that he finds himself at home in every form of poetry. Following Pablo Neruda's "Book of Questions", Tamilanban also published a book of questions, in the centenary year of Pablo Neruda (2004). The discerning reader can find or cannot find answers but will certainly experience a thrill and wonder with every question and at times with a zen touch. The question form is meant to tease him, disturb him and goad him into action.

*(From the pamphlet published by 'Sahitya Akadimi' in connection with the "Meet the Author" programme held on 4th May 2009 at Chennai.)*



ஏழாயிரம் ஆண்டுகளுக்குமுன்
தென் தமிழகத்து
இடுப்பில் இருந்த குழந்தை இலங்கை

அனுராத புரத்தின்
தூக்கத்திற்கும் இது தெரியும்
பொலன்னறுவையின் மறதிக்கும்
இது தெரியும்.

மலையகத்துத்
தேயிலைத் தோட்டத்தில் காற்றை
நிறுத்திக் கேளுங்கள் அது
தமிழில் பதில் சொல்லும் உங்கள் கேள்விக்கு.

பால் சுரக்கும் மரங்களின்
வேர்களும் மண்ணும் இன்று கூடத்
தமிழில்தான்
விடுகதைகள் போட்டுக் கொண்டிருக்கின்றன.



அன்னை
முத்தமிழ்ப்
பதிப்பகம்